|| ஓம் நம: ஶிவாய||

# || ஶ்ரீ ஶிவ மஹிம்ன ஸ்தோத்ரம் ||



## ஶ்ரீ புஷ்பதந்தர் அருளிய

# ஶ்ரீ சிவ மகிமை தோத்திரம்

---

தமிழில்

மீ. ராஜகோபாலன்

rajjag@gmail.com

உ

# விநாயகர் துதி



க$_3$ஜானனம் பூ$_4$தக$_3$ணாதி$_3$ ஸேவிதம்
கபித்த$_2$ ஜம்பூ$_3$ ப$_2$லசாருப$_4$க்ஷனம் |
உமாஸுதம் ஶோகவினாஶ காரகம்
நமாமி விக்$_4$னேஶ்வர பாத$_3$பங்கஜம் ||

ஆனை முகனை அருவடியார் பணிகோனை
நாவற் கனியடவி நற்கனியா லினியோனை
ஊனத் தழிவை உமையாள் தனயோனை
ஈனத் துயரை இலாதாக்குந் தூயோனை
ஞானத் தருவை நற்றாள் தாமரையை
நானத் திருவை நயந்தே பணிவேனே!

## பொருள்:

யானை முகமும் (க$_3$ஜானனம்), பூதங்கள் முதலான அடியார்களால் (பூ$_4$தக$_3$ணாதி$_3$) வணங்கப்படுபவனும் (ஸேவிதம்), நாவற்கனி முதலான வனப் பழங்களைச் (கபித்த$_2$ ஜம்பூ$_3$ ப$_2$ல) சுகமாய்ப் (சாரு) புசிப்பவனும் (ப$_4$க்ஷனம்), உமையின் புதல்வனும் (உமாஸுதம்), (ஊனப் பிறவியைக் கொடுக்கின்ற) எல்லாத் துயரங்களையும் (ஶோக) அழிப்பதற்கு (வினாஶ) (ஞானமாகிய வளர்ச்சி என்னும்) காரணமானவனும் (காரகம்), இன்னல் நீக்கும் இறையவனும் (விக்$_4$னேஶ்வர) ஆகிய விநாயகப்

பெருமானின் திருவடித் தாமரைகளில் (நான்) (பாத₃பங்கஜம்) பணிகின்றேன் (நமாமி).

**குறிப்பு:**

ஊனப் பிறவித் துயரமே பெரிய துன்பம் என்பதால், ஶோக வினாஶ: என்பதற்கு ஊனமாகிய பிறவியின் அழிவினைத் தருபவர் எனும் பொருளில் “ஊனத்தழிவே” என்ற புகழ்ச் சொல்லும், பிறவித்துயரை அறுப்பதற்கு ஞானமாகிய பயிரே வளர வேண்டும் என்பதால், ஊனப் பிறவியை அழிக்கின்ற ஞானத்தருவாக நம்முள் விளைகின்ற அருள் எனும் பொருளில், “ஞானத் தருவே” எனும் புகழ்ச் சொல்லும் தமிழ் வார்ப்பில் சேர்க்கப்பட்டன.

உ

## குருவணக்கம்



ஸதா$_3$ஶிவ ஸமாரம்பா$_4$ம் ஶங்கராசார்ய மத்$_4$யமாம் |
அஸ்மதா$_3$சார்ய பரியந்தா$_3$ம் வந்தே$_3$ கு$_3$ரு பரம்பராம் ||

சதாசிவர் முதலா யேற்ற சங்கரர் நடுவா யாற்றி
விடாதருட் தருவா யூற்றி விளங்குயர் குருவே போற்றி!

பரமாச்சார்ய இத்யேவம் சங்கரத்$_3$தை$_3$வம் இத்யபி |
யோகி$_3$ஶோவிஶ்ருதஶ்சந்த்$_3$ரஶேக$_2$ரேந்த்$_3$ர ஸரஸ்வதி ||

தெய்வமே மனித ரான திருவுரு பரமாச் சார்ய
மெய்முனி சந்த்ர சேகர மேதகு யோகி போற்றி!

ஜயேந்த்$_3$ர-ஸ்ரீ-கு$_3$ருஶ்சாஸ்மதா$_3$சார்யோ ம்ருது$_3$ருஜ்ஜ்வல: |
ஶங்கரோ விஜயேந்த்$_3$ரஶ்ச த$_2$ச்சிஷ்ய: ஸம்ஶித-வ்ருத: ||

உய்யறத் தீரர் நேயர் உயர்குரு ஜயேந்திரர் போற்றி!
செய்யருட் சீலர் சேயர் சீர்குரு விஜயேந்திரர் போற்றி!

# அணிந்துரை

## “திராவிடாசார்யா” ஸ்ரீ ராமகிருஷ்ண ஸ்வாமிஜி

ஶாஸ்த்ர நேத்ராலாயா, ரிஷிகேஷ்

ஸ்ரீ குருப்யோ நம:

ஶிவ மஹிம்னா ஸ்தோத்திரம் எனப்படும் இந்த கிரந்தமானது மிகவும் பிரபலமான ஒரு க்ரந்தம் ஆகும்வேத . ரகசியத்தை கூறும் உபநிடதங்கள் எவ்வாறு பொதுவாக துவக்க வார்த்தைகள் கொண்டு அறியப்படுகிறதோ அதன் அது போல இந்த கிரந்தமும்'மஹிம்னா' என்ற வார்த்தை கொண்டு துவங்குவதாலும், இறைவனின் வர்ணிக்கப்பட இயலாத மகிமைகளை கூறுவதாலும் அவ்வாறு அறியப்படுகின்றது .

வேதங்களில் யஜுர் வேதமும் அதனில் ருத்ரமும் மிகவும் மேன்மையானதுருத்ரமானது எவ்வாறு ஶிவ இந்த . பூஜைகளில் படிக்கப்படுகின்றதோ அது போல தினமும் மாலை வேளைகளில் ஶிவ பூஜையின் போது இந்த மஹிம்னா ஸ்தோத்திரமானது வட இந்திய கோவில் மற்றும் ஆஸ்ரமங்களில் படிக்கப்படுகிறது.

இதனை ஶிவனுக்கு உரியதாக பொதுவாக ஏற்றாலும், ஸ்ரீ மதுசூதன சரஸ்வதி அவர்கள் இதனை ஹரி-ஹரன் இருவருக்கும் பொதுவான ஒரு க்ரந்தமாக விளக்கியுள்ளார்.

மிக முக்கியமான ஒரு கிரந்தமானாலும் இதனை சமஸ்கிருதம் அல்லது ஹிந்தியிலோ எழுதியவர் மிகவும் குறைவே. இப்படி இருக்கும் நிலையில் தமிழில் எவரும் அறியாததான இந்த க்ரந்தத்திற்கு, சமஸ்கிருத பதங்களுக்குத் தமிழில் பொருள் தந்ததோடு அல்லாமல் இதன் பொருள் கெடாமல் தமிழில் அழகிய கவிதையாக வடித்து அதற்கு பொருளும் தந்து நம் எல்லோருக்கும் மிகவும் அறிய உபகாரத்தைச் செய்துள்ளார் ஆசிரியர்.

பல ஶ்ருதியில் ஶங்கர என்ற பதத்திற்கு ஸ்ரீ சங்கராசாரியார் என்ற பொருள் படும்படி கூறியிருப்பது ஆசிரியருக்கு அன்னாரிடமுள்ள பக்தியை காண்பிக்கின்றது. இது ஸ்ரீ ஶங்கர திக் விஜத்தில் கூறியிருப்பது போல உள்ளது "ஶம்போ சரதி பூமௌ ஶங்கராசார்ய ரூபா" (அந்த ஶிவனே ஸ்ரீ சங்கராசாரியராக இந்த பூமியில் அவதரித்திருக்கின்றார்). "அவன் அருளாலே அவன் தாள் வணங்கி"' என்பதற்கு இணங்க இங்கும் இந்த வாக்கு மயமான பூஜையானது அவன் அருளுக்காக அவன் பாதங்களில் சமர்பிக்கிறார் ஸ்ரீ புஷ்ப தந்தர்.

பொருளுணர்ந்து சொல்வது மிகவும் சிறப்பானதாக ஏற்கப்படுகிறது. மூலமான சமஸ்க்ருதமிருக்க தமிழைப் படிப்பானேன் என்றால், அதற்கும் மூலமான வேதமிருக்க அதற்கும் மூலமான ஈஷ்வரன், அதற்கும் மூலமான காரண பிரம்மம் என்று கூற இயலும் என்பதால், இங்கு காரண பிரம்மத்தை எல்லோரும் அறிவது அறிது, வேதத்தை படிக்கத் தகுதி முதலியவை கூறப்பட்டுள்ளதாலும், சமஸ்க்ருதத்தை தமிழர்கள் பொதுவாகத் தவறாக உச்சரிப்பதாலும் தமிழில் கசடறப் படிக்க ஏற்ற இந்தக் கிரந்தத்தை எல்லோரும் படித்து உய்ய வேண்டும்.

ஸ்ரீ ராமகிருஷ்ண ஸ்வாமிஜி

ரிஷிகேஷ் - 29 ஜூன் 2016

## பணிவுரை

சிவ மஹிம்ன ஸ்தோத்திரம் எனும் அரிய வடமொழி நந்நூலின் தமிழ்ப் பதிவு இது.

ஓர் காலத்தில், மிகச்சிறந்த சிவனடியாராக இருந்த புஷ்பதந்தர் என்ற கந்தர்வர், பூமியில் இருக்கும் ஒரு பூ வனத்தில், அற்புதமான மலர்கள் பூத்துக் குலுங்குவதைக் கண்டு, அவற்றைத் தன்னுடைய இறைவனான சிவபெருமானுக்கு அர்ச்சிக்க வேண்டும் எனும் தாகத்தால், தமது உருவத்தை மறைத்துக் கொண்டு, நாள்தோறும் அம்மலர்களை எல்லாம் கொய்து பூஜை நடத்தி வந்தார். அப்பூவனத்தின் உரிமையாளரான அரசனும் ஒரு சிவபக்தன். பூக்கள் களவு போவது அறிந்தும், உருவமற்ற கந்தர்வரைக் காண முடியாததால், அரசன் ஆழ்ந்து யோசித்து, ஓர் நாள் பரசிவனுக்கு அர்ச்சித்த வில்வ இலைகளைப் பூவனத்தின் தரையில் பரப்பி வைத்தான். அதை அறியாமல், புஷ்பதந்தர் அந்த வில்வ இலைகளை மிதிக்க நேரிட்டதால், தமது காந்தர்வ சக்தியை இழந்து விடுகிறார். பூக்களைக் களவாடிய குற்றத்தை உணர்ந்து, அதனை மன்னித்து மீண்டும் பழைய சிறப்பினைப் பெறவேண்டும் எனப் பரசிவனை அன்பினால் அழைத்து, அழகான துதிப்பாடல்களால் தொழுகிறார். அவரது முதல் மூன்று பாடல்களிலேயே மயங்கிய கருணாமூர்த்தியான சிவபெருமான் அன்னாருக்கு அருள் கனிவதால், புஷ்பதந்தரும் தன் சிறப்பினை மீண்டும் அடைகிறார். மறைந்திருந்து இவற்றை எல்லாம் கண்டு களித்திருந்த சிவபக்தனான அரசன், புஷ்பதந்தர் பாடியருளிய பாடல்களை எல்லாம் தொகுத்து "சிவ மஹிம்ன ஸ்தோத்திரம்" என உலகோர் உய்யப் பாடிப் பரவினார்.

இவ்வாறே, இத்தோத்திரத்தின் வரலாற்றைப் புராணங்கள் கூறுகின்றன. இன்றும், தென்னிந்தியாவில் ஸ்ரீ ருத்ரம் எப்படிப் போற்றப்படுகிறதோ, அதைப்போலவே

வடஇந்தியாவில் சிவ மஹிம்னா ஸ்தோத்திரம் போற்றப்படுகிறது.

சிவ மஹிம்னா ஸ்தோத்திரம் எனும் இப்பாடல்களை, வேதாந்தப் பொருளை பதித்திருக்கும் திருவிளக்காகவே புஷ்பதந்தர் ஏற்றி வைத்திருக்கிறார் என்பது அடியேனின் எண்ணம். இத்தோத்திரம் கவிநயமும், பொருள்நயமும் கொண்டு, பல சிவபுராணக் கதைகளை நினைவூட்டுவதானாலும் ஆழத்தில் உபநிடத உண்மையைப் பொலிய வைத்துள்ள அருநிதியமே என என்னுள் காட்டியதும் குருவருளே ஆகும். இந்நூலைச் செந்தமிழிலும், ஆங்கிலத்திலும் மொழி வார்க்கத் தூண்டியதும் அப்பேரருளே என்பதால், எல்லாப் பெருமைகளும் இறைவனுக்கே சேர்வதாகும்!

அணிந்துரை வழங்கிய பெருந்தகை ஸ்ரீ ராமகிருஷ்ண ஸ்வாமி அவர்களுக்கும், எனை என்றும் வழி நடத்திச் செல்லும் ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடமாகிய கற்பகத் தருவின் காலடிகளுக்கும் பணிவினைத் தெரிவித்துக் கொள்கிறேன். அடியேனின் இம்முயற்சிக்கு, அருள்மிகு புஷ்பதந்தர் அனுமதி அருளவும், அறியாமையால் யான விளைத்த தவறுகளைச் சான்றோர்கள் திருத்தவும், அதனால் யான் திருந்தவும், திருவருள் துணை புரியட்டும்.

மீ. ராஜகோபாலன்

**1**

மஹிம்ன: பாரம் தே பரமவிது$_3$ஷோ யத்$_3$யஸத்$_3$ருஶீ
ஸ்துதிர்ப்$_3$ரஹ்மாதீ$_3$னம் அபி தத$_3$வஸன்னாஸ்த்வயி கி$_3$ர: |
அதா$_2$(அ)வாச்ய: ஸர்வ: ஸ்வமதிபரிணாமாவதி$_4$ க்$_3$ருணன்
மமாப்யேஷ ஸ்தோத்ரே ஹர நிரபவாத$_3$: பரிகர: || 1 ||

**பொருள்:**

ஒருவேளை (யத்$_3$) நினது (தே) பெருமையின் (மஹிம்ன:) அளவினை (பாரம்) முழுமையாக (பரம்) அறியாதவருடைய (அவிது$_3$ஷோ) துதி (ஸ்துதி) குறையானதாகி விடலாம் (அஸத்$_3$ருஶீ). அப்படியானால் (தத்$_3$) நின்பால் (த்வயி) பிரம்மா (ப்$_3$ரஹ்மா), முதலானோர் (ஆதீ$_3$னாம்) செய்த துதிகளும் (கி$_3$ர: அபி) முழுமையானவை ஆக முடியாது (அவஸன்னா:)! ஆயினும் (அத$_2$), தமது (ஸ்வ) அறிவின் (மதி) வளர்ச்சியை (பரிணாம) ஒட்டியே (அவதி) அனைவரும் (ஸர்வ:) நின்னைப் புகழ்வது (க்$_3$ருணன்) மறுக்கப்படக் கூடாததே (அவாச்ய)! (அதனால்) ஓ கள்வனே! (ஹரா!) என்னுடைய (மம) இத்துதியின் (ஏஷ: ஸ்தோத்ரே) புகழ்ச் சொற்றொடர்களும் (பரிகர: அபி) தடை செய்யப்படக் கூடாதனவே ( நிரபவாத$_3$:)! (1)

அறி யாதவர் துதி யாலள வறி யாருன தருமை!
அது போலவே பிர மாதியர் அடை யாருன தளவை!
எவ ராயினு மவ ராய்மன வித மாயறி வதனால்
சிவ மாமுனைப் புகழ் வாரதிற் சிறி தானது மில்லை!
தன தாய்மதி விரி வால்துதி அள வாற்சிவ மகிமை
தரு வாரது தகை யாமெனில் வெகு வாமிது முழுமை
அடை யாதது என வாகினும் அணி யாய்ப்புக ழெனது
அள வாகினும் கள வாணியே அத வாதமும் அரிது!

(1)

குறிப்பு:

நந்நூலாசிரியர்கள் தங்களின் நூலின் தொடக்கத்தில், தமது பணிவைச் சமர்ப்பிப்பது நல்லொழுக்கம். அந்தவகையிலே புஷ்பதந்தர் இந்த முதற்பாடலில் தான் எடுத்துக்கொண்ட அரிய முயற்சி யாதெனக் கூறி, அதனை இறைவன் அன்புடன் ஏற்க வேண்டும் என வேண்டுகின்றார்.

இறைவனது அளவில்லாப் பெருமையை யாரால் அளக்க முடியும்! பிரம்மன் முதலான தெய்வங்கள் செய்கின்ற துதிகளும், இறைவனை முழுமையாகப் புகழ முடியாது! மேலும், ஒவ்வொருவரும் அவரவரின் அறிவின் முதிர்ச்சிக்கு ஏற்பவே இறைவனைப் புகழ முடியும்! இக்காரணங்களை எல்லாம் காட்டி, தன்னுடைய இத்துதியினையும் இறைவன் ஏற்றுக் கொள்வதே முறை என புஷ்பதந்தர் அன்புக் கட்டளையிடுகிறார்.

கதையின்படி, தாம் செய்த மலர்த்திருட்டாகிய தவற்றினைத் திருத்தி உயர்வு பெறவே புஷ்பதந்தர் இப்பாடல்களை அருளினார் என்பதாலோ என்னவோ, இறைவனை "திருடனே" எனும் பொருளைத் தருகின்ற சொல்லால், “அரனே” என அழைத்துப் பணிகின்றார். அடியாரின் ஆணவத்தைத் திருடுகின்ற நற்கள்வன் அல்லவா பரசிவன்!

இப்பாடலில் இறைவனை எவராலும், முழுமையாகப் புகழ முடியாது என ஆசிரியர் கூறுகின்றார். அதற்கு முதற்காரணம், அவரை நாம் அறிவினால் அறிந்து கொள்ள முடியாது என்பதே!

ஒருவரை முழுமையாக அறிந்திருந்தால் மட்டுமே அவரது புகழை நாம் முழுமையாகக் கூற முடியும். இறைனுக்கோ உருவம் இல்லை! வேதாந்தம் நம்முடைய அறிவினாலோ, புலன்களினாலோ இறைவனை அறிய முடியாது எனக் காட்டுகின்றது. எனவே “இறைவன் இந்த வடிவத்தில்தான் இருக்கிறார்” என நம்மால் எப்படித் தீர்மானிக்க முடியும்? அன்பினால், இறைவனின் வடிவத்தை எப்படி எல்லாம்

நாம் மனதால் தியானித்துப் போற்றினாலும், அவ்வடிவங்களை எல்லாம் தாண்டியவராகவே இறைவன் இருக்கிறார் என்பதால், அவரது வடிவங்களைப் போற்றுகின்ற நமது புகழுரைகள் முழுமையானதாக முடியாது.

ஒருவரை நேரில் பார்க்க முடியவில்லை என்றாலும், அவரது படைப்புக்களை எல்லாம் நாம் நன்றாக அறிந்திருக்கிறோம் என்றால், அவ்வறிவால் நாம் அவரைப் புகழுவது இயலும். ஆனால் இறைவனால் படைக்கப்பட்ட உலகங்களும், உயிர்களும் எண்ணற்றனவாக, முடிவில்லாதனவாக இருக்கின்றனவே! இவற்றையெல்லாம், முழுமையாகக் கற்று அறிந்து, அவ்வறிவினால், அவற்றைப் படைத்த இறைவனை முறையாகப் புகழ்வது என்பது நம்மால் சற்றும் முடியாத செயலாகிறதே! எனவே வெளியிலிருக்கும் உலகங்களைப் பற்றிய அறிவினைக் கொண்டும் இறைவனை நாம் அறிவது முடியாத செயலாகிறது.

மேலும் உலகில் நாம் ஒருவரைப் புகழும்போது, பொதுவாக அவரது சிறப்புக்களை மிகைப்படுத்திச் சொல்லுவோம். அன்பும், நந்நோக்கமுமே அப்படிப் புகழ்வதற்குக் காரணம் என்றால், அந்த மிகையான புகழுரைகளால் தவறில்லை. அப்படிப் புகழ்பவரும், புகழப்படுபவரும் புகழ்ச்சியில் மிகையான சிறப்புக்கள் இருக்கின்றன என்பதையும் அறிந்தே அவற்றை ஏற்றுக் கொள்கிறார்கள். ஆகவே, புகழுரை என்றாலே, மிகைப்படுத்தப்பட்ட சிறப்பு என்பது நமக்கு உலகில் வழக்கமாக இருக்கிறது.

ஆனால் இறைவனோ, எல்லாப் புகழுக்கும் மேலாக, இன்னும் புகழப்பட வேண்டியவராகவே இருக்கிறார். அதனால் இறைவனை எப்படிப் புகழ்ந்தாலும், அது மிகையும் அல்ல, முழுமையும் அல்ல என்பதே உண்மை.

இறைவனை முழுமையாகப் புகழவே முடியாது என்றால், பிறகு எதற்காகப் புஷ்பதந்தரும், அவரைப் போலவே மற்ற நல்லடியார்களும், தத்தம் அறிவிற்கேற்ப இறைவனைப் புகழத் துணிகிறார்கள்?

இதற்கான காரணத்தை ஆசிரியர் தமது அடுத்த பாடலில் தருகின்றார்.

2

அதீத: பந்தா$_2$னம் தவ ச மஹிமா வாங்மனஸயோ:
அதத்$_3$வ்யாவ்ருத்த்யா யம் சகிதம் அபி$_4$த$_4$த்தே ஶ்ருதிரபி |
ஸ கஸ்ய ஸ்தோதவ்ய: கதிவித$_4$கு$_3$ண: கஸ்ய விஷய:
பதே$_3$ த்வர்வாசீனே பததி ந மன: கஸ்ய ந வச: || 2 ||

**பொருள்:**

நினது (தவ) புகழ் (மஹிமா), நிச்சயமாக (ச) வாக்கினாலும் (வாக்) மனதினாலும் (மனஸயோ) அடையப்பட (பந்தா$_2$னம்) முடியாதது (அதீத:). வேதங்கள் கூட (ஶ்ருதி: அபி), அதனை (நினது புகழை) (யம்), நடுக்கத்துடனேயே (சகிதம்), விலக்குவன காட்டி விளக்குவதாக (வ்யாவ்ருத்த்யா), அதாவது "இல்லை அது" (அதத்$_3$) என்ற முறையிலேயே காட்டுகின்றன (அபி$_4$த$_4$த்தே). (ஆகையால்,) யாரால் (கஸ்ய) அவரை (ச:) முறையாய்ப் புகழ இயலும் (ஸ்தோதவ்ய)! எத்தனை வகையான (கதிவித$_4$) குணங்கள் (கு$_3$ண:) (அவருக்கு என) யாரால் (கஸ்ய) அறிய முடியும் (விஷய:)! இருப்பினும் (து), அவரின் உருவம் (பதே$_3$) (உள்ளத்தில்) நுழைந்த பிறகு (அர்வாசீனே) எவருடைய (கஸ்ய) மனமும் (மன:) மொழியும்தான் (வாக்) அவரது புகழில் ஈடுபடாமல் இருக்க முடியும் (ந.. ந.. பததி)! (2)

மன மாயினும் மொழி யாயினும் அள வாயிட லரிது
மகி மாதவ நின தாளுமை முடி யாதது பெரிது
மறை யாதிலு நினை யாரெனத் தள ராடிடும் அமுது
மணி வாசக நுனி யாமது இல தாமது மரபு
எவ ராய்வது குண மாவது எவை யாவது முடிவு
எவ ராலனு பவ மாவது இய லாதது தெளிவு
சிவ மானது பவ மாயிரு தய மானபின் மனது
எவ ராயினு முன தாயுரை உரி தாவது இயலே!

(2)

குறிப்பு:

அளவிட முடியாத உலகங்களை நம்மால் முற்றிலும் அறிந்துவிட முடியாது என்பதால், அவ்வறிவைக் கொண்டு, யாவற்றையும் படைத்த இறைவனையும் முழுமையாகப் புகழ்ந்துவிட முடியாது! இருப்பினும் தத்தம் அறிவின் முதிர்ச்சிக்கேற்ப இறைவனைப் புகழ அனைவருக்கும் உரிமை உண்டு. இதனை முதற்பாடலில் உணர்த்திய புஷ்பதந்தர், இப்பாடலில், அப்படிப் புகழ்வதற்கும் தகுதியான மனமோ, அறிவோ, மொழியோ தனக்கு இல்லை எனக் கூறுகின்றார். மேலும் ஆழ்ந்த அன்பினால் விளையும் அனுபவங்களை வார்த்தைகளால் பிறருக்கு விளக்க முடியாது அல்லவா! உயர்வான இறையனுபவத்தை எப்படிச் சொல்லாலும், அறிவாலும் விளக்குவது!

இதைத் தவிர மற்றுமொரு ஆழ்ந்த மறைபொருள் உண்மையும் இப்பாடலில் சுட்டிக் காட்டப்படுகிறது.

இறைவனை, வேதாந்தமும் "இல்லை இது, இல்லை இது (நேதி நேதி)" எனும் வழியில், எல்லாப் புறப்பொருட்களையும் தள்ளியபிறகு, எது மிஞ்சி இருக்கிறதோ, "அதுவே ஆத்மா, அதுவே பிரம்மம்" எனச் சுற்றி வளைத்துக் காட்டுகிறது. மறைகளே அப்படி என்றால்,

நம்மால் அப்பரம்பொருளை எப்படி நேரடியாக அறிந்து கொள்ளவோ, முழுமையாகப் புரிந்து கொள்ளவோ, முறையாகப் புகழவோ முடியும்! இருப்பினும், இறைவனைப் பற்றிய சிந்தனை மனதுக்குள் வந்துவிட்டால், அன்பும், உற்சாகமும் கொப்பளிக்க, இறைவனைப் பல வகையிலும் உருவகப்படுத்திப் புகழ்வதற்கும், போற்றுவதற்கும் எவருக்குத்தான் உரிமையும் ஆசையும் இல்லாமல் போகும்! இப்படி வியந்து, இறைவனைப் புகழ்கின்ற தன்னுடைய மாளாத ஆவலையும், மீள முடியாத ஆற்றாமையையும் ஆசிரியர் இங்கே காட்டுகின்றார்.

இதனை ஆய்வோம்.

இறைவனுக்கு உருவமில்லை. ஏனெனில் அவருக்கு எல்லையும் இல்லை! எல்லை என்பது இருந்தால் மட்டுமே நீள, அகல, உயரம் எனும் அளவுகளும், அதனால் வடிவங்களும் எடுபடும். எனவே இறைவன் எல்லையற்றவராய், உருவமற்றவராய் இருக்கின்றார்.

இறைவனுக்கு உருவம் இல்லை என்றால் என்ன, அவரைக் கண்கள் பார்க்கவில்லை என்றாலும், மற்ற புலன்களால் அறிய முடியாதா? உருவமற்ற பல உலகியல் உண்மைகளை நாம் அனுமானித்தும், ஆய்ந்தும் அறிவதில்லையா? எனவே இறைவனை மனத்தாலும், அறிவாலும் ஏன் அறிந்து கொள்ள முடியாது?

இதற்கான விடையை அறிய, நாம் "அறிதல்" என்னும் அனுபவத்தையே முதலில் ஆராய வேண்டும்.

ஒன்று அறியப்படுகிறது என்றால், அங்கே அறிபவர் ஒருவரும், அறியப்படும் பொருள் ஒன்றும், அத்துடன் அறிவதற்கான கருவி ஒன்றும் இருக்க வேண்டும். பார்த்தல், கேட்டல், ருசித்தல், நுகர்தல், தொடுதல் முதலான உணர்ச்சிகள் நமக்கு அறிவை ஏற்படுத்த, உடலும், மனதும்

நமது கருவிகளாக இருக்கின்றன. அப்படிப் பார்த்தும், கேட்டும், ருசித்தும், நுகர்ந்தும், தொட்டும் அனுபவிக்கும் பொருட்கள் உலகில் எவ்வளவோ இருக்கின்றன. அவற்றை எல்லாம் உடல், மனம் ஆகிய கருவிகளைக் கொண்டு அறிவது யார்? அந்த சக்தி எது?

உடலும், மனமும் சடப்பொருட்கள் அல்லவோ! ஆழ்ந்த உறக்கத்திலேயே, உடலும், மனமும் வலிமைகளை இழந்து அடங்கிப்போய் விடுகின்றன. உண்மையில் அவற்றுக்கு அறிவொளி என்பதே கிடையாது. உடலுக்கு இயற்கையில் அறிவொளி இல்லை என்பதை உயிரற்ற பிணத்தைப் பார்த்தாலே புரிந்து கொள்ள முடிகிறது. அதுபோல மனமும் சடமானதுதான் என ஏற்பதில்தான் நமக்குத் தயக்கம் இருக்கிறது. இதற்குக் காரணம் மனம் மிக நுண்ணியதாயும், "நான்" எனும் உணர்வுடன் ஒன்றி இருப்பதாகவும் நாம் காணுவதால்தான்.

ஒரு இரும்புக் கோளம் தீயிலே வாட்டப்பட்டால், அதுவும் தீயாக ஒளிர்வதைப் பார்க்கிறோம். ஆனால் அது தீயல்ல என்பது நமக்குத் தெரியும். ஒரு கண்ணாடியில் தீபத்தின் ஒளிபட்டால், அக்கண்ணாடியே தீபத்தைப் போலப் பளிச்சிட்டு அருகில் இருப்பனவற்றைக் காட்டும். ஆனால் அது தீபம் அல்ல என்பதும் நமக்குப் புரியும். அவைகளைப் போன்றே, மனம் எனப்படும் நுண்ணுடல், ஆத்மாவின் ஒளியினால் சக்தியைப் பெற்று, ஆத்மாவின் ஒளியினையே பிரதிபலிக்கிறது. இவ்வாறு ஆத்மாவின் ஒளியினைப் பிரதிபலிப்பதாலேயே, சடமாகிய மனமும் இயற்கையிலேயே அறிவொளியாக இருப்பதுபோல் தோன்றுகிறது.

அப்படி ஆத்மாவின் ஒளியினால், உயிர்த்து அறிவொளியுடன் விளங்கும் மனம் "சிதாபாசம்" எனப்படும். வடமொழியில் "சித்" எனும் சொல் ஆத்மாவைக் குறிப்பது. அதற்கு முழுமையான அறிவு எனப் பொருள். எது அறிகிறதோ, எது அறிவாக

விளங்குகிறதோ, அதுவே "சித்". வடமொழியில் "ஆபாசம்" என்ற சொல்லுக்கு “ஒன்றைப்போலவே இருப்பது” அல்லது “பிரதிபலிப்பு" எனப் பொருள். மனம் ஒளியினைப் பெற்று, ஆத்மாவைப்போலத் தெரிவதால், ஒளியுடைய மனதிற்கு "சிதாபாசம்" எனப் பெயரானது. இதுவே “சூக்ஷ்ம சரீரம்” என நமக்குள் விளங்கும் மெல்லுடல். மனதின் ஒளியினாலேயே, “ஸ்தூல சரீரம்” எனும் நமது வல்லுடலும் ஒளியினைப் பெறுகின்றது. ஆராய்ந்து பார்த்தால், எப்படிக் கதிரவனின் ஒளியில் தாமரை மலர்கிறதோ, அப்படியே ஆத்மாவின் ஒளியைப் பெற்றவுடன், மனதில் அறிவின் ஒளி எழுகிறது. அதனாலேயே மனம் உயிர்த்து, அதில் எண்ணங்கள் மலர்கின்றன. அந்த எண்ணங்களின் ஒளியே, அதற்கான பொருளையும் பிரகாசப்படுத்துகிறது. எண்ணங்கள் எழும்போது, மனமே அவ்வெண்ணத்தால் விளைந்த அறிவாகவும், அவ்வறிவினால் நாம் அனுபவிக்கும் பொருட்களாகவும், அவ்வாறே உலகங்களாகவும் எழுகின்றது. மனதில் ஆத்மாவின் ஒளி இல்லாதுபோனால், மனம் வெறும் சடப்பொருளாகவே இருக்கிறது. ஆழ்ந்து உறங்கும்போது, மனம் என்ன ஆயிற்று என ஆராய்ந்தால், நமக்கு மனதின் இருப்பும், இழப்பும் புரியும்.

இது ஆழ்ந்து சிந்திக்கப்பட வேண்டிய ஒன்று.

யோக சாத்திரம் மனதில் எழும் எண்ணங்களை, "விருத்தி" என்ற சொல்லினால் அழைக்கும். ஒவ்வொரு விருத்தியும், ஒரு அறிவினை மனதினுள் விளைப்பது. அதனால் ஒரு எண்ணமாய் விரிவது. அந்த எழுச்சியினாலேயே மொழியும், செயலும், அனுபவங்களும் விளைகின்றன. இவ்விருத்திகளோ, மாறிக் கொண்டே, மீண்டும் மீண்டும் மனதில் வந்து கொண்டே இருப்பன. இவற்றின் எழுச்சியால்தான் மனம் என்பது சலித்துக்

கொண்டிருப்பதாயும், நில்லாமல் ஓடிக் கொண்டிருப்பதாய் நாம் அறிகிறோம்.

இப்படி எழும் எல்லா எண்ணங்களுக்கும் வேதாந்தம் "இதம் விருத்தி" அல்லது "இப்படியான எண்ண அலைகள்" எனப் பெயரிடுகிறது. இவற்றுக்கு அடிப்படையாக மற்றுமொரு விருத்தியையும் வேதாந்தம் சுட்டிக் காட்டுகிறது. அது "அஹம் விருத்தி" என்பதாகும். அதுவே "நான்" எனும் உணர்வையும் அதை ஒட்டிய வேறுபாடுகளையும் மனதில் வளர்ப்பது. எனவே அஹம் விருத்தியே எல்லா எண்ணங்களுக்கும் முதலாக இருக்கிறது எனக் கொள்ளலாம்.

இந்த "நான்" எனும் உணர்வு எதனைப் பற்றிக் கொண்டிருக்கிறது என்பதை ஆய்வதே வேதாந்தப்பொருளை விளக்கிடும் திறவுகோல். ஆனால் உலக வாழ்க்கையில் நமக்கு "நான் யார்" எனும் கேள்விக்கே நேரமில்லாமற் போகிறது. இக்கேள்வியை நாம் முக்கியமானதாக எடுத்துக் கொள்ளும்வரை, நமக்கு "நாம் யார்" என்பதில் மயக்கமும், "உடல், மனம் இவற்றின் சேர்க்கைதான் நான்" எனும் தவறாத பிடிப்பும், அதனால் அவற்றால் கட்டுப்பட்டுப் போவதும் ஏற்படுகின்றன. உடலும், மனமும் சடப்பொருட்களே என்பதை ஆழ்ந்து அறிந்தவர்களுக்கே, "நான் யார்" எனும் கேள்வியாகிய திறவுகோலைக் கையாளும் ஆர்வமும், ஈடுபாடும் ஏற்படும்.

எனவேதான் வேதாந்தம், மனம் என்பது கண் என்றால், அக்கண்ணின் கண்ணாக இருப்பது ஆத்மா, மனம் என்பது செவி என்றால், அச்செவியின் செவியாக இருப்பது ஆத்மா என்றெல்லாம் காட்டி உடலும், மனமும் நாமல்ல என உணர்த்துகின்றது. அந்த ஆத்ம அறிவொளிதான், ஒருவனைப் பார்ப்பவனவாக, கேட்பவனவாக, ருசிப்பவனாக, நுகர்பவனாக, உணர்பவனாக, ஆய்பவனாக – அதாவது subject எனும் முதற் பொருளாகக் காட்டுகிறது.

அதனால்தான், அவனால், மற்ற எல்லாவற்றையும், object எனும் அறியப்படும் பொருளாகக் காண முடிகிறது. எவை எல்லாம் அறியப்படுவனவோ, எவை எல்லாம் அடையப்படுவனவோ, அவை எல்லாம் பொருட்கள் – objects.

அப்படி அறியப்படும், அனுபவிக்கப்படும் (objectified) எல்லாமே சடப்பொருட்கள், எல்லாச் சடப்பொருளுக்கும் ஒளியைத் தருவதே ஆத்மா, அந்த ஆத்மாவே பானைக்குள் இருக்கும் வெளியினைப் போல உடலுக்குள் ஒளிர்ந்து கொண்டிருக்கும் ஜீவாத்மா, அதை உணர்வதாலேயே, பரந்த வெளியினைப் போல எல்லையற பரமாத்மனையும் உணரலாம் என வேதாந்தம் காட்டுகிறது.

இதனை உணர, இரண்டு வழிகளை வேதாந்தம் தருகிறது.

எல்லையற்றதான ஆத்மாவை வாக்கு, மனம் இவற்றால் எல்லாம் காட்ட முடியாது என்பதால், வேதாந்தம் எவை எல்லாம் நமது உடலாலும், மனதாலும் அறியப்படுகிறதோ, அனுபவிக்கப்படுகிறதோ, அவை எல்லாம் ஆத்மா அல்ல என்பதை "ந இதி" - "இது இல்லை" - எனச் சுட்டிக்காட்டி ஒவ்வொன்றாகக் கழித்துவிடச் சொல்கிறது. இப்படிச் சொல்லப்படும் அறிவுக்கு "நிஷேத போதம்" அல்லது "விலக்கி விளக்கல்" எனப் பெயர்.

அப்படி எல்லாவற்றையும் விலக்கிக் கொண்டே வந்தால், இறுதியில் ஒன்றும் இல்லாமல் போய்விடுமே என, பகவான் புத்தரை அடுத்து வந்த சிலர் வாதமிட்டு, “முடிவில் ஒன்றுமில்லை, எல்லாமே சூன்யம்" என்பதான இல்லாமையைத் தங்களது முடிவாக ஏற்றுக்கொண்டு அதையே கொள்கையாகவும் பரப்பி வாழ்கிறார்கள். அது தவறு.

"இது இல்லை" என விலக்கிக் கொண்டே வந்து, விலக்குவதற்கு இனி எதுவுமே இல்லை என்றால் – அங்கே விளங்கிக் கொண்டிருப்பது, எல்லாவற்றையும் விலக்கிய,

அருள் விளக்கு. அது விலக்கப்பட முடியாததாகப் பிரகாசித்துக் கொண்டிருக்கிறது !

அப்படி விலக்க முடியாததாக விளங்குவதே ஆத்மா என உணர்த்துவதுதான் வேதம். “சூன்யம்” என நாம் தவறிப் போய்விடக் கூடாது எனும் கருணையினாலேயே, வேதாந்தம் "விதி போதம்" அல்லது "உறுதிபட விளக்கல்" எனும் மற்றொரு வகையில், ஆத்மா இத்தன்மையதாய் இருக்கும் என நிச்சயம் செய்யத் தருகிறது. அதனை "உள்ளது, ஒளிர்வது, நிறைவது" என்னும் மூன்று முக்கியச் சொற்களால், "ஸத்-சித்-ஆனந்தம்" என விளக்குகிறது. இம்மூன்று சொற்களும் ஆழ்ந்த ஆய்வுக்கும், ஞானத்துக்கும் நம்மை ஈர்ப்பவை. சுருக்கமாக இதனை ஆய்வோம்.

ஆத்மா எல்லையற்றதாக இருக்கிறது. முடிவு என்பது வடமொழியில் "அந்தம்" எனப்படும். முடிவற்றது "அனந்தம்". எனவே ஆத்மா அனந்தமாக இருக்கிறது. அப்படியானால், அது எங்கும் நிறைந்தும் இருக்கிறது. “பூரணம்” என முழுமையான நிறைவாக, ஆனந்தம் என ஆத்மா விளங்குகிறது.

உலக இன்பங்கள் நமக்கு முழுமை தருவதில்லை. அவை சலித்து விடுவதும் உண்டு. ஒர்நாள் இன்பம் மற்றொரு நாள் துன்பமாகலாம். ஒருவருக்கு இன்பமாயிருப்பது, மற்றொருவருக்குத் துன்பமாய் இருக்கலாம். எனவே உலகில் நாம் அடைகின்ற இன்பங்கள் எதுவுமே முழுமையான நிறைவு ஆகாது.

எங்கே நமக்கு எவ்விதத் தாக்கமும் இல்லையோ, எங்கே சுகம், துக்கம், பயம், ஆசை, கோபம் எனும் எவ்விதப் பாதிப்பும் இல்லையோ, எது எப்பொழுது கிடைத்தாலும் நிறைவையே தருகிறதோ அதுவே முழுமையான நிறைவு. அதுவே ஆனந்தம்.

அப்படி ஒரு ஆனந்தம் இருக்கிறதா என்றால், “அது இருக்கிறது, உண்மையில் அது மட்டுமே இருக்கிறது” எனச்

சொல்கிறது வேதாந்தம். அதற்கான ஓர் அடையாளம்தான், நாம் தினமும் அனுபவிக்கின்ற ஆழ்துயில். கருணையால் ஆத்மா நமது மனதையும்,உடலையும் ஒய்வுபடுத்த, தனது ஒளியினைத் தன்னுள் ஈர்த்துக் கொண்டுவிடுகிறது. அதனால் மனம் சடமாகி, அதன் எல்லா விருத்திகளும் அடங்கி விடுகின்றன. உடலும் அதனால் உறக்கத்தில் சடமாகி விடுகிறது. ஆத்மாவின் அரவணைப்பில், “பிராணன்” எனும் சுவாசம் மட்டுமே நடந்து கொண்டிருக்க, மனமும், உடலும் ஓய்ந்து கிடக்கின்றன. அல்லல் எதுவும் இல்லாமல், ஆத்மாவின் அரவணைப்பில் இருப்பதாலேயே, ஆழ்துயில் எவருகும் ஆனந்தமாக இருக்கிறது.

யாருக்கேனும், ஆழ்துயிலின் அமைதியிலும், நிறைவிலும் குறைகாண இயலுமா! இவ்வாறு முழுமையான நிறைவும், முடிவில்லாததும் ஆத்மா என்பதால், வேதாந்தம் ஆத்மாவின் இன்னொரு இலக்கணமாக, “ஆத்மா அனந்தம், ஆனந்தம்” எனக் காட்டுகிறது.

இவ்வாறு, அறிவொளியாகவும், முழுநிறைவாகவும் ஆத்மா இருக்கிறது என வேதாந்தம் சொல்வதில், ஒரு முக்கியமான சொல் "இருக்கிறது" என்பதாகும்.

"நான் இருக்கிறேன்" என்பதை நம்மில் யார் மறுக்க முடியும்! அல்லது அதற்கான நம்பிக்கையோ, நிரூபணமோ ஒருவருக்குத் தேவையா என்ன, இல்லையே! "நான் இருக்கிறேன்" என்ற உணர்வு எப்போதும் உள்ளது. "உள்", "அது"!

இதைச் சுட்டிக்காட்டத்தான், வேதாந்தம் ஆத்மாவை "ஸத்" எனும் சொல்லினால், எப்போதும் மாறாமல் உள்ளது எனக் காட்டுகிறது.

எனவே "ஸத்-சித்-ஆனந்தம்" என என்றும் மாறாது விளங்கும், முழு அறிவான, முழுமையான நிறைவே ஆத்மா. அது உள்ளே கடந்து இருக்கையில் கடவுள். எங்கும் இறைந்து கிடப்பதில் இறைவன். இப்பேருண்மையை நோக்கியே, நாம் போய்க்கொண்டிருக்கிறோம். நமது

பாதைகள் மாறினும், பயணம் இறுதியில் இவ்வுண்மைக்கே இட்டுச் செல்லும்.

எனவே இயன்ற அளவு, மனதாலும், மொழியாலும் பரம்பொருளைப் புகழ்வதில் நாம் உறுதி கொள்ள வேண்டும் என அடுத்த பாடல் வலியுறுத்துகின்றது.

3

மது$_4$ஸ்பீ$_2$தா வாச: பரமமம்ருதம் நிர்மிதவத:
தவ ப்$_3$ரஹ்மன் கிம் வாக்$_3$ அபி ஸுரகு$_3$ரோர்விஸ்மயபத$_3$ம் |
மம த்வேதாம் வாணீம் கு$_3$ணகத$_2$னபுண்யேன ப$_4$வத:
புனாமீத்யர்தே$_2$(அ)ஸ்மின் புரமத$_2$ன பு$_3$த்$_3$தி$_4$ர்வ்யவஸிதா || 3 ||

**பொருள்:**

பரம்பொருளே (ப்$_3$ரஹ்மன்)! (மூன்று) புரங்களை அழித்தவரே (புரமத$_2$ன)! நிறைவானதும் (ஸ்பீ$_2$தா) இனிமையுடையதும் (மது$_4$) அமிழ்தானதுமான (அம்ருதம்) சொற்கள் (வாச:) உடைய வேதங்களைத் தந்த (நிர்மிதவத:), மிக உயர்வான (பரமம்) தங்களைத் (தவ), துதிக்கின்ற தேவர்களின் வார்த்தைகளிலும் (ஸுரகு$_3$ரோர் வாக் அபி) வியப்பென்ன இருக்கிறது (கிம் விஸ்மயபத$_3$ம்)! நினது (ப$_4$வத:) குணங்களை (கு$_3$ண) விழைந்து பாடுகின்ற (கத$_2$ன) நற்செயலினால் (புண்யேன), உண்மையில் (து) என்னுடைய (மம…எனாம்) பேச்சும் (வாணீம்) தெளிவாக ஆகட்டும் (புனாமீ)! இதற்காக (இத்யர்தே$_2$), இப்படிப் பாடுவதில் (அஸ்மின்) உறுதிப்பட்டதாக (வ்யவஸிதா) (என்) அறிவு இருக்கிறது (பு$_3$த்$_3$தி$_4$:)! (3)

சுர வானவ ரம ராதிபர் குரு வானவ ரவரும்
சுக மாகிய மறை வாசகச் சுவை யாகிய அமுதைத்
தர லாகிய பர மான்மனைத் துதி யாலடி பணியத்

தர மாயுள மன மாமொழி தக வாகிடு மதனால்
வர மாயுன தரு மாநிதி பர மாநின தருமை
வடி வாயுரை நல மாவினை வள மாகிட முடியும்
அத னாலிது மதிசூடிய அய ராதிது வுறுதி
அரு வாமுப் புர மாறிய அர னாகிய சிவனே!
(3)

குறிப்பு:

முந்தைய பாடலில் பரம்பொருளை வாக்காலும், மனதாலும் கூறி விளக்க முடியாது எனக் காட்டிய புஷ்பதேவர், இப்பாடலில் வாக்காலும், மனதாலும் பரம்பொருளின் புகழை நாம் கூற முயல்வதே, நம்முடைய வாக்கையும், மனதையும் தூய்மைப் படுத்துவதற்கான வழி எனக் கூறுகின்றார்.

முப்புரங்களை அழித்து அருள்பாலித்தவர் சிவபெருமான். அவரை முற்றும் உணர முடியாவிடினும், அவரைப் புகழ்ந்து பாடுவதால் தெய்வங்களும், முனிவர்களும் தங்கள் மனமும் மொழியும் செம்மைப்பட்டனர். அதன் பொருட்டும், புஷ்பதந்தர் சிவபிரானின் புகழைப் பாட இப்பாடலில் உறுதி கொள்கிறார்.

சிவபுராணத்தில் முப்புரங்களை சிவபிரான் அழித்தார் எனக் காட்டுவது, அன்னார் ஆணவம், கன்மம், மாயை எனும் மும்மலங்கள், அதுபோலவே விழிப்பு, கனவு, துயில் எனும் முவ்வனுபவங்கள், மற்றும் முக்காலங்கள் எனப் பலவிதக் கட்டுக்களில் சிக்கிக் கிடக்கும் ஜீவாத்மனை விடுதலை செய்வதற்காக, அக்கட்டுக்களை எல்லாம் அழித்து, முப்புரங்களைக் கடந்த அப்புரமாகிய "துரீயம்" எனும் சிவமயச் சந்நிதியைத் தருகிறார் என்பதை உணர்த்தவே ஆகும்.

தன்னுள்ளே விளங்கும் ஆத்மனே பரம்பொருள் எனும் உண்மையைப் புரிந்து கொள்ளவும், அப்படிப் புரிந்து

கொண்டாலும், உள்ளத்துள் ஒன்றி அந்த இறை உணர்விலேயே எப்போதும் நிலைத்து இருக்க, நமக்கு இரண்டு முக்கியமான தகுதிகள் வேண்டும்.

முதலாவது "சித்த சுத்தி" எனச் சொல்லப்படும் மனத்தூய்மை.

மனம் என்பது ஒரு சடப்பொருள், அது ஒரு கருவி என்பதை மறந்து, மனமே நம்மை ஆள்கின்ற சக்தியாகும்படி நாம் விட்டுவிட்டோம்! மனமானது ஆத்மாவின் ஒளியைப் பிரதிபலித்தே அறிவினைப் பெறுகின்றது என்பதை “சிதாபாசம்” எனும் சொல்லினால் நாம் அறிந்து கொண்டோம். அப்படி ஒளியைப் பிரதிபலிக்கும் கண்ணாடியாக மனம் இருக்கிறதென்றால், அதன் தூய்மையை பொருத்தே, பிரதிபலிக்கும் ஒளியின் தன்மையும் விளங்கும் அல்லவா? பழுதாயும், அழுக்காயும், சாயங்கள் பூசியும் கண்ணாடி இருந்தால், அதில் பிரதிபலிக்கும் பிம்பங்களும் தூய்மையற்றதாகத்தானே தோன்றும்! அதுபோலவே, தூய்மையற்ற மனதில், விளையும் எண்ணங்களும் துய்மையற்றதாய் விளங்கும்.

மனதில் தோன்றும் எண்ணங்களின் தன்மைகேற்ப, "ஆகர்ஷணம்", "விகர்ஷணம்" என்பதான "வேண்டுதல் வேண்டாமை" எனும் மாற்றங்கள் மனதினைத் தாக்கும். அவற்றின் தாக்கத்தினால்தான் நாம் வாழ்வில் அலைக் கழிக்கப்படுகிறோம்.

ஆசை, துயரம், மயக்கம் எனும் இடர்கள் எல்லாம் அவற்றாலேயே வருகின்றன. மனதின் ஆளுமைக்குள் வீழ்ந்து, சீரற்ற எண்ணங்களின் தாக்கத்தால் வாடுவதே "ஸம்ஸாரம்" எனும் துயரம் ஆகும்.

எனவே எண்ண எழுச்சிகளைச் சீராக்குவதன் மூலமே மனதின் ஆளுமையைத் தகர்க்க முடியும் என யோக சாத்திரம் போதிக்கின்றது. எண்ணச் சீர்மையினாலேயே

மனதின் ஓட்டத்தை ஒழுங்குபடுத்தவும், அதனால் மனதை ஆளும் வலிமையைப் பெறவும் ஒருவரால் இயலும். தெளிவடைந்த மனதில் எழுகின்ற எண்ணங்கள் சீரானதாகவும், உயர்வானதாகவும் இருக்கும். அதுவே "சித்த சுத்தி" எனப்படுவது. அப்படி மனத் தூய்மை அடைவதற்கே, பலன் கருதாப் பணி (கர்ம யோகம்), அன்பு வழி (பக்தி யோகம்) என்றெல்லாம் பல படிகளைப் பாடங்களாக நமது சாத்திரங்கள் தந்துள்ளன.

மனத்தூய்மை வந்துவிட்டால், மனதில் நல்லுணர்வு மட்டுமே எழும்! அந்நல்லுணர்வு, நம்முள்ளே, இறையுணர்வைத் தூண்டும்! அத்தூண்டலுக்கு இயைந்து, அவ்விறையுணர்வில் நழுவாமல் இருப்பதற்குத்தான் "திட புத்தி" எனும் மதியுறுதி தேவை. அப்படி அறிவும் உறுதி கொண்டுவிட்டால், மனமும் அம்முயற்சியிலேயே நிலையாக இருக்கும். அப்படி இருத்தலே "சங்கர்ஷணம்" எனும் “நற்படுதல்”. அப்பெரும்பயன் இறையருளும், பெருமுயற்சியும் கொண்ட தூய மனமுடைய எல்லோர்க்கும் தானாகவே வாய்த்துவிடும். அவர்கள் மட்டுமே எவ்விதப் பாதிப்பும் இன்றி உலக விவாகரங்களில் ஈடுப்பட்டிருக்க முடியும். விழிப்பு, கனவு, ஆழ்துயில் என மாறி மாறி வரும் அனுபவங்களை வெறும் சாட்சியாக மட்டுமே பார்த்துக்கொண்டு, அவற்றால் எவ்வித்த தாக்கமும் அடையாமல் தன்னுள்ளேயே நிலைக்கும் "துரீயம்" எனும் பேரின்பத்தில் நிலைத்திருக்க முடியும்.

சித்த சுத்தியும், திட புத்தியும் இல்லாதவர்க்குத் துயரமே வாழ்க்கையாகிறது. வேதாந்தம் அதற்கும் மூன்று முக்கியக் காரணங்களைத் தருகிறது.

அவை "நான்" எனும் ஆத்மாவைத் தவறாகப் புரிதல் (ஆணவ மலம்), அத்தவற்றினால் செய்கின்ற வினைகளின் பளு (கன்ம மலம்), அத்தகைய தவற்றினில் ஆழ்த்துகின்ற

அறியாமை (மாயா மலம்) என்பன. இம்மூன்று மலங்களைப் பற்றிச் சைவ சித்தாந்தங்கள் மேலும் விளக்கிக் காட்டுகின்றன.

மும்முலங்களின் வெளிப்பாடும், நம்முள் இயற்கையில் எழுகின்ற மூன்று தன்மைகள் அல்லது குண வேறுபாடுகளால் ஏற்படுகின்றன. அவை "ஸத்துவம்" எனும் சமநிலை, "ரஜஸ்" எனும் செயல்நிலை, "தமஸ்" எனும் செயலறுநிலை என்பன. இந்த முக்குணங்களும் கலந்தும், ஒன்றுக்கொன்று அடங்கியும், ஓங்கியும் காலத்திற்கேற்ப மாறிக்கொண்டு இருப்பதாலேயே நமது மனமும் மாற்றங்களை விளைத்துக் கொண்டு இருக்கின்றது.

முக்குணங்கள், மும்மலங்கள், முவ்வனுபவங்கள் என்றெல்லாம் உள்ள இத்தடைகளையே முப்புரங்கள் எனச் சிவபுராணம் காட்டுகின்றது. நம்மைக் கட்டிச் சிறைப்பிடித்திருக்கும் அந்த முப்புரங்களையும் தகர்த்து அழித்து, நம்மையே நம்முள் உணரவைத்து விடுதலை தருகின்ற அருளைத்தான் "அரனே" என்றும், "முப்புரங்களை அழித்த சிவனே" என்றும் புராணங்கள் போற்றுகின்றன. அப்பேரருளைப் பாடிப் புகழ்வதால், நமது சொல்லும், செயலும், அனுபங்களும் வளம் அடைகின்றன.

அதனாலேயே மனதில் தூய்மையும், மதியில் உறுதியும் பெறமுடிகிறது எனக்கூறி, அதனால், "அரனே, உன்னைப் பாடி உயர்வேன்" என புஷ்பதந்தர் இப்பாடலில் நமக்கும் மறைபொருள் உண்மையினை மாசற விளக்கியுள்ளார்.

4

தவைஶ்வர்யம் யத்தஜ்ஜக₃து₃த₃யரக்ஷாப்ரலயக்ருத்
த்ரயீவஸ்து வ்யஸ்தம் திஸ்ருஷு கு₃ணபி₄ன்னாஸு தனுஷு |
அப₄வ்யானாமஸ்மின் வரத₃ ரமணீயாமரமணீம்
விஹந்தும் வ்யாக்ரோஶீம் வித₃த₄த இஹைகே ஜட₃தி₄ய: || 4 ||

**பொருள்:**

வரமருளும் பெருமானே (வரதா)! நினது (தவ) அருள் நிதி (ஐஶ்வர்யம்) எதுவோ அதனால் (யத்-தத்$_3$) உலகினுக்கான (ஜக$_3$த்) செயலாம் (க்ருத்), தோற்றுவித்தல் (உத$_3$ய), காத்தல் (ரக்ஷா) அழித்தல் (ப்ரளய) ஆகிய மூன்று (த்ரை) விளைவுகளும் (வஸ்து) மூன்று (திஸ்ருஷு) மாறுபட்ட (பி$_4$ன்னாஸு) குணங்களினால் (கு$_3$ண), மூன்று (திஸ்ருஷு) வடிவங்களாக (தனுஷு) அமைந்துள்ளன (வ்யஸ்தம்). இதனைப்பற்றி (அஸ்மின்), இவ்வுலகில் (இஹ), சில (இகே) அறிவிலிகள் (ஜட$_3$தி$_4$ய), தெளிவற்ற மக்களை (அப$_4$வ்யானாம்) மகிழ்விப்பதற்காக, (ரமணீயாம்) ரசனையாகவும் (வ்யக்ரோஶீம்) (ஆனால்) கேடானதும் (அரமணீம்), துவள வைப்பதுமாக (விஹந்தும்) (வாதங்களைச்) செய்கிறார்கள் (வித$_3$தே$_4$). (4)

வர மாயருள் பெரு மானுன தரு ளாகிய நிதியம்
வள மாயது உரு வாகிடும் வளர் வாயழி உலகம்
என மூவித வுரு வாயிறை அரு ளாகிய வடிவம்
இய லாகிய குண மூவகை அவை யாகிய படிவம்
சில மூடர்க ளிது காணவு முடி யாமலே சிறுமை
சிர மூடிய மட மானவ ருண வாகிட மடமை
தர மாகிட முட வாயுரை தளர் வாகிட இனிமை
தட வாமலே தரு வாரவை தவ றானது தானே!
(4)

**குறிப்பு:**

மூன்று அனுபவ உலகங்கள், மூன்று குணங்கள் என்றெல்லாம் முந்தைய பாடலில் நம்மைச் சிந்திக்கச் செய்த புஷ்பதந்தர், இப்பாடலில், இந்த முவ்வகைப்பொருளை விளக்கவே, மும்மூர்த்திகளாகப் பரம்பொருளைப் புராணங்கள் காட்டியிருக்கின்றன என்ற

ஆழ்ந்த உண்மையை மறந்துவிட்டு, சிலர் கடவுள் திருவுருவங்களுக்குள் உயர்வு தாழ்வு கற்பித்து, வாதிட்டு வேதனைப்படுகிறார்கள் என அவர்களது அறிவின்மையைச் சுட்டிக் காட்டுகிறார்.

பரம்பொருள் ஒன்றே! அதையே "பிரம்மம்" என உபநிடதங்களும், "பரசிவம்" என ஆகமங்களும் காட்டுகின்றது. அதனையே புராணங்கள் சிவ-சக்தியாக, ஆதி நாராயண நாராயணியாக, திரிபுரசுந்தரியாக, பிரம்மா, விஷ்ணு, உருத்திரன் எனும் மும்மூர்த்திகளாக – இப்படிப் பலவாறான தெய்வ வடிவங்களாகத் தந்து, அவற்றுக்கான வழிபாடு முறைகளையும் நமக்குத் தருகின்றன. இவை எல்லாமே, ஒன்றேயான பரம்பொருளுக்கே உரியது எனும் உண்மையை மறந்துவிட்டு, "என் தெய்வம்தான் பெரிது" எனச் சாத்திரங்களை எல்லாம் சுவையாக மேற்கோளாகக் காட்டி, வேண்டாத விவாதங்களினால், பிறருடைய மனதில் வேறுபாட்டினையும், அயரவைக்கும் தேவையற்ற கொள்கை விளக்கங்களையும் சிலர் செய்வர். எனினும், உண்மை பக்தி உடையவருக்கு, தெய்வங்கள் வேறாகத் தெரியாது. அன்பினால் செய்யும் எல்லாத் துதிகளும், பரசிவமாகிய பேருண்மையையே சேரும் என்பதில் அவர்களுக்கு எவ்வித ஐயமும் இருக்காது.

வேதாந்தம் இறைவன் என்பது பகுக்கப்படமுடியாத ஒன்று (அத்வைதம்) எனக் காட்டுகிறது. அப்பரசக்தியே எல்லா உடல்களுக்குள் உயிர்த்திருக்கும் சக்தியாகவும் இருக்கிறது. வேதாந்தம் இப்படித் தோன்றும் உறவினை, "பரமாத்மா-ஜீவாத்மா" என்றும், "பிரம்மம்-ஜீவன்" என்றும், "ஈஸ்வரன்-ஜீவன்" என்றும், "பதி-பசு" என்றும் பலவாறாகப் பெயரிட்டுப் போற்றுகின்றது.

பகுக்கப்பட முடியாத பரம்பொருள் ஒன்றுதான், அதைத்தவிர வேறு எதுவும் இல்லை என்றால் வேறுபட்டு

விளங்கும், அளப்பறியா பல பொருட்களும், உலகங்களும் எப்படி வந்தன? நான், நீ, அவன், அவள், அது எனப் பிரித்துக் காட்ட கோடானு கோடி இருக்கின்றனவே!

இக்கேள்விகளுக்கு, வேதாந்தம் இருவகையில் பதிலளித்து நம்மைப் படிப்படியாக உயர்த்துகிறது.

முதலில் "பிரம்மம், பரமாத்மா, சிவம்" மற்றும் பல பெயர்களாலும் உருவங்களாலும் அழைக்கப்படுகின்ற இறைச்சக்தி ஒன்றே! அதுவே படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் எனும் ஐந்து வகையானச் செயல்களைச் செய்து, அதனால், உலகங்களையும் உயிர்களையும் படைத்தும், வளர்த்தும், அழித்தும், தனது இத்திருவிளையாடலை மறைத்தும், பிறகு அருளினால் அனைத்தையும் தன்னுள்ளே ஈர்த்தும் வருகிறது. இருப்பினும் அருட்செயல்களைச் செய்கின்ற ஒன்றேயான இறைச்சக்தியைப் பலவாறாக அழைக்கவும், ஆராதிக்கவும், இரசிக்கவும், பிரமிக்கவும், வெவ்வேறான வடிவங்களும், பெயர்களும் நமக்குத் தேவைப்படுகின்றன.

எப்படி ஒருவரே, மற்றொருவருக்குத் தந்தையாகவும், வேறொருவருக்குக் கணவராகவும், பிறிதொருவருக்கு மகனாகவும் இருக்கிறாரோ, அதுபோலவே ஒன்றேயான பரசிவமே படைக்கும் பிரம்மன், காக்கும் திருமால், அழிக்கும் ருத்திரன், மறைக்கும் மாயை என்றெல்லாம் விளங்குகிறார். இதனைச் சரியாகப் புரிந்து கொள்ளாமல், இவர்களில் யார் பெரியவர், வலியவர் என்றெல்லாம் விவாதங்கள் செய்து, சாத்திரங்களில் சான்றுகளைத் தேடி, அதனால் காலத்தை விரயம் செய்வது வீண். எவ்வடிவம், எப்பெயர், எவ்வரலாறு நமக்குப் பிடிக்கிறதோ, நமது மனதுக்குக்ம் அறிவுக்கும் ஈர்ப்பினைத் தருகிறதோ, அதனையே ஏற்று, அவ்வழியிலேயே சென்று உயரவேண்டும். இதுவே நாம் கடக்க வேண்டிய முதற்படி.

இரண்டாவதாக ஒன்றேயான பரசிவம் எனும் உண்மையை ஆய்தல்.

பரசிவம் பலவற்றையும் எவ்வாறு படைக்கிறது, அப்படிப் படைப்பதற்கு வேறு பொருட்கள் வேண்டாமா, எல்லாப் பொருட்களுமே இறைவன் என்றால், படைக்கப்பட்ட எல்லாமும் இறைவனாகத்தானே ஆக வேண்டும் என்றெல்லாம் ஆய்வதும் ஓர் வழியாக இருக்கிறது.

வேதாந்தம் அத்தகைய ஆய்வின் முடிவாக – அறிவின் முடிவாக – நமக்குத் தருவது மிகவும் ஆச்சரியம் தருவதும், ஆழச் சிந்தித்தால் நம்மை அரவணைத்து ஆட்கொள்வதுமான ஒரு பேருண்மை. அதாவது, கனவில் நமக்குள் படைத்தும், வளர்த்தும், அழித்தும் நாம் காணும் உலகங்களைப் போலவே பரசிவத்தின் கனவாக எல்லா உலகங்களும் இருக்கின்றன. இறைவனது இச்சையினாலாயே அவை எல்லாம் எழுகின்றன. நமது ஆலயங்களிலும், புராணங்களிலும், பரம்பொருளைத் தவக்கோலத்தில் பரசிவமாக, அறிதுயிலில் திருமாலாக, யோக வடிவில் பராசக்தியாக – இப்படி எல்லாம் ஓர் தவ நித்திரையில் இருப்பதாகப் படைத்திருப்பதும், இந்த ஒப்பற்ற உண்மையைக் காட்டத்தானோ எனத் தோன்றுகிறது.

துயில் கலைந்து புறவிழி திறந்தால், எப்படி நமது கனவுலகு அழியுமோ, அப்படியே, நமது அக விழி திறந்தால், பாகுபாடுகள் எல்லாம் அழிந்து, "ஏகம் சத்தியம்" – ஒன்றே உண்மை – எனப் பாகுபாடற்ற பரசிவமாய் யாவும் இருப்பதை உணர வேண்டும். இதைத்தான் சிவபெருமான் தமது மூன்றாம் விழியினைத் திறக்க, எல்லா உலகங்களும் அழிவதாகப் புராணங்களும் காட்டுகின்றன. அப்பரசிவமே ஆத்மனாக நம்முள் ஒளிர்ந்து, மேற்சொன்ன ஐந்தொழிலையும் நம்முள்ளேயே நடத்தி, திருவிளையாடலைச் செய்கிறார். இப்பேருண்மையை

உணர்பவர்களுக்கு, சமயங்களினால், சாத்திரங்களினால், பழக்க வழக்கங்களினால், எப்போதும், எவ்விதத்திலும் இறைவனில் பாகுபாடு கண்டு வாதிக்கின்ற துயரம் இல்லை.

இவ்வாறு இப்பாடலின் மூலம், ஞானம் எனும் நல்லிறையுணர்வு வந்துவிட்டால், பக்தி எனும் பல்வழிப் பாதைகளிலும், இணக்கம் மட்டுமே தெரியும், வேறுபாடுகளைத் தாண்டிய வேத விளக்கம் புரியும், உலகில் அதனால், அன்பு, ஒற்றுமை எனும் நற்பண்புகளே செழிக்கும் என்பதை எல்லாம் ஆசிரியர் சுட்டிக் காட்டியுள்ளார்.

5

கிமீஹ: கிங்காய: ஸ க$_2$லு கிமுபாயஸ் த்ரிபு$_4$வனம்
கிமாதா$_4$ரோ தா$_4$தா ஸ்ருஜதி கிமுபாதா$_3$ன இதி ச |
அதர்க்யைஶ்வர்யே த்வய்யனவஸர து$_3$:ஸ்தோ$_2$ ஹததி$_4$ய:
குதர்கோ(அ)யம் காம்ஶ்சித் முக$_2$ரயதி மோஹாய ஜக$_3$த: || 5 ||

**பொருள்:**

"என்ன (கிம்) இச்சை (இஹ:) அவருக்கு இருக்கிறது (ஸ க$_2$லு)? என்ன (கிம்) உடல் (காய:) அவருக்கு (ஸ க$_2$லு)? மூன்று உலகங்கள் (த்ரிபு$_4$வனம்) முதலானவற்றை உருவாக்க, (ஸ்ருஜதி) படைப்பவராகிய இறைவனது (தா$_4$தா) வழிகள் (உபாய:), ஆதாரங்கள் (ஆதா$_4$ர:) மூலப் பொருட்கள் (உபாதா$_3$ன) எவை (கிம்)" - என இவ்வாறு (இதி ச), மூடமான (து$_3$:ஸ்த:) வளமில்லாத (அனவஸர), எதிர்மறை வாதங்களால் (குதர்க:), வெறி கொண்டவர்கள் (ஹததி$_4$ய:), இவ்வாறு வாதிக்க முடியாத (அயம் அதர்க்ய) நினது (த்வயி) பெருமையைப்பற்றி (ஐஶ்வர்யே) வீண் வாதங்களைச் செய்து (முக$_2$ரயதி) சிலருக்கு (காம்ஶ்சித்)

உலகில் (ஜக3த:) மதி மயக்கத்தை (மோஹாய) (விளைக்கிறார்கள்)! (5)

உல காயுள பல வாயன தர யாதவ ரிச்சை
உட லாயெது உடை யாரவ ருரு வாகிடு மச்சை
தள மாயெது தட மாயெது பொரு ளாய்பவ ருண்டு
தர மூவுல வித மாமெனப் பல கேள்விக ளுண்டு
விரி வாயள வில தாயதி பதி யாமுன தருமை
விளி யாரறி வில ராய்மடமொழி யாலவ ரிழுதை
எதி ராயவர் வெறி யாலுரை பதி வாரது கலகம்
மதி மாயவும் கதி தேயவும் மலி தாகிடு முலகம்!
(5)

குறிப்பு:

பகுத்தறிகிறேன் என்று, பலரும் பலவும் கற்று, "உலகத்தைப் படைக்க இறைவனுக்கு எப்படி முடிந்தது, அவருடைய கருவிகள் என்ன, அவரது அறிவு எத்தகையது, அவருக்குக் கருவிகளையும், அறிவையும் யார் கொடுத்தது" – என்றெல்லாம் முடிவில்லாத கேள்விகளில் சிக்கிக் கொண்டு, மாறிக் கொண்டேயிருக்கும் அறிவினால் புதிது புதிதான வழிகளில் ஆராய்ந்து அலைவார்கள். அவை ஆணவத்தாலும், மூடத்தனத்தாலும் வருவதே! அத்தகையோரின் வாதங்களை இரசித்து, அவற்றில் மயங்கி ஈடுபடும் மற்றவர்களும், எளியதான அன்பு வழியினை மறந்து விட்டு, அறிவு மயங்கிக் குழம்பித் திரிவார்கள். அதனால், அவர்களது உலகமும் துயரப்படுகிறது.

எனவே "பகுத்தறிவு" முக்கியம் என்றாலும், அறிவுக்கு அப்பாற்பட்டதை அறிவால் அடைய முடியாது எனத்

தெளிந்து "தொகுத்துணரும் பக்குவமும்" பெற்று, அதனால் அன்பு வழியினையே நாம் ஏற்க வேண்டும்.

இப்பாடலில் மிக முக்கியமான கருத்து ஒன்று நமக்குக் கிடைக்கிறது.

எப்படி ஒருவருக்குச் செல்வத்தினால் செருக்கு வருமோ, அது போலவே அறிவும் ஒரு சுமைதான்! அதுவும் செருக்கினை வளர்க்கும் ஒரு குறைதான்! எனவே அறிவையும் ஒரு கருவியாகமட்டுமே பயன்படுத்துகின்ற பக்குவம் நமக்கு வரவேண்டும்.

சாத்திரங்கள் ஆத்மாவாகிய இறைவன் அறிவுக்கும், மனதுக்கும், சொல்லுக்கும், செயலுக்கும் அப்பாற்பட்ட சக்தி எனச் சொன்னாலும், அவ்வுண்மையைப் புரிய வைப்பதற்காக, பலவிதமான கருத்துக்களையும், நியதிகளையும் நமக்கு அளிக்கின்றன. எப்படிப் புறப்பொருளை ஆராய்கின்ற அறிவியலில், பலவிதத் தத்துவங்களும், கேள்விகளும் ஆயப்படுகின்றனவோ, அப்படியே அகப்பொருளை ஆய்கின்ற வேதாந்த சாத்திரங்களிலும் வியப்பும், வினாவும் எழுப்புகின்ற பல கருத்துக்கள் இருக்கின்றன. அவை எல்லாம் ஆராய்வதற்கும், வாதிடுவதற்கும் வளமையான நிலமாகத்தான் இருக்கின்றன. ஆனல் அவை யாவும், நாம் கடப்பதற்கான பாதைகளே அன்றி, அதிலேயே கிடப்பதற்கான முடிவு அல்ல!

"வேத அந்தம்" என்றாலே அறிவின் முடிவு. எனவே பகுத்து அறியும் அறிவும் அடங்க வேண்டும். தொகுத்துணரும் முதிர்ச்சி வர வேண்டும். அதன் பயனால் இறையனுபவத்தை அடைய வேண்டும். அதை விட்டுவிட்டு ஏதோ ஒரு கிளுகிளுப்பைத் தருகிறது என்பதற்காகவே சாத்திரங்களைப் படிப்பதும், அதனை ஒட்டி வாதங்கள் செய்வதும், "தேன்" என்று எழுதி அவ்வாறு

எழுதிய ஏட்டினை நக்கிச் சுவைப்பது போலத்தான். அது வெறும் அறிவுச் சுமை, துயரில் நிறுத்தும் ஆணவப் பளு!

இதனை உணர்த்தவே, வேதாந்தத்தை நிலை நிறுத்த அவதரித்த பகவான் ஆதிசங்கரர், "தத்தம் மனம்போல இறையுணர்வைத் தேடுங்கள்" என ஆராதனைகளாலும் பக்தியினாலும் பயணிக்கப் பல பாதைகளையும் நமக்காக அமைத்துக் கொடுத்துள்ளார்.

எனவே "அறிந்து அடங்குதல் ஞானம்" என்பதையும், "அடங்கி அறிதல் பக்தி" என்பதையும், இவ்விரண்டுமே ஒரு நாணயத்தின் இருபக்கங்கள் என்பதையும் நாம் உணர்ந்து உயர்வுற வேண்டும்.

6

அஜன்மானோ லோகா: கிமவயவவந்தோ(அ)பி ஜக$_3$தாம்
அதி$_4$ஷ்டா$_2$தாரம் கிம் ப$_4$வவிதி$_4$ரனாத்$_3$ருத்ய ப$_4$வதி |
அனீஶோ வா குர்யாத்$_3$ பு$_4$வனஜனனே க: பரிகரோ
யதோ மந்தா$_3$ஸ்த்வாம் ப்ரத்யமரவர ஸம்ஶேரத இமே || 6 ||

**பொருள்:**

"தேவ தேவனே (அமர வர:)! உலகங்கள் (லோகா:) பல பாகங்களுடன் இருந்தாலும் (அவயவவனந்த: அபி) அவை எல்லாம் ஆதாரம் அற்றதாகுமா என்ன (கிம் அஜன்மான:)! உலகங்களை எல்லாம் (ஜக$_3$தாம்) தாங்கிக் கொண்டிருக்கும் ஆதார சக்தி என (அதி$_4$ஷ்டா$_2$தாரம் ) எதுவும் இல்லாமல் (அனாத்$_3$ருத்ய) உலகத்தின் படைப்பு (விதி$_4$: ப$_4$வ) இருக்க முடியுமா என்ன (கிம் ப$_4$வதி)! இறைவன் இல்லை (அனீஶோ), எனக் கொண்டால் (வா), உலகங்களை (பு$_4$வன) உருவாக்க (ஜனனே) உதவி செய்யும் (குர்யாத்$_3$) கருவியானது (பரிகர:) எது (க:)?" - இப்படி எல்லாம் (யத:),

இந்த (இமே) முட்டாள்கள் (மந்தா₃:) நினது மகிமைக்கு எதிராக (த்வாம் ப்ரதி) ஐயத்தை எழுப்புவர் (ஸம்ஶேரத)! (6)

உல காமிவை பல பாகமு முள தாயின தெனினும்
உரு வாகிடத் தள மாயொரு நில மாதர விலையோ!
கலை யாயுல கிவை யாவையு விளை வாகிட லென்று
நிலை யாயுள கலை யாமடிப் படை யாகிட லொன்று!
இறை யாயெது கிடை யாதது என வாதிட லுண்டு!
இவை யாகிடத் துணையாகிட எவை யாமென விண்டு
குறை யாகிய அறி வாலிவர் நிறை யாமுன தருமை
குலை வாதிட அலை வார்பெரு மிறை வாமஹ தேவே!
(6)

குறிப்பு:

"இறைவன் இல்லை" என வாதிடுபவர்களும், "இறைவன் இருக்கிறார்" என வாதிடுபவர்களும் ஒவ்வொரு வழியில் தங்கள் கருத்துக்களை நிலை நாட்ட முயன்று களைத்து விடுகிறார்கள். புராணங்களில் காட்டப்பட்ட கருத்துக்களின் தத்துவங்களைப் புரிந்து கொள்ளாமல், தம்முடைய சிற்றறிவுக்கும், அனுபவங்களுக்கும் தக்கபடி சாத்திரங்களை எதிர்த்தும், மதித்தும் தொடர்ந்து வாதமிடுவார்கள். இதெல்லாம் எதற்கு எனக் கேட்டு, இப்பாடலில், மற்றுமொரு முக்கியமான வேதாந்தப் பாடத்தை ஆசிரியர் நமக்கு நினைவுபடுத்துகிறார்.

உலகில் நாம் அறிவியல் எனக் கொள்வதெல்லாம், நம்முடைய அறிவினால் நிரூபிக்கப்பட்ட உண்மைகள் எனச் சொல்கிறோம். "அறிவு" என நாம் கொள்வது, பார்த்தல், கேட்டல், ருசித்தல், நுகர்தல், தொடல் எனும் நேரடி அறிவுக் கருவிகளின் பயனைத்தான். அவற்றை "பிரத்யக்ஷப் பிரமாணம்" எனச் சாத்திரங்கள் கூறுகின்றன. ஆனால் நுணுக்கமான பல பொருட்களும் இருக்கின்றன, அவை எளிதாக நம்முடைய புலனறிவிற்கு எட்டாதன

என்பதால் நாம் "அனுமானப் பிரமாணம்" எனும் யூகித்து அறிகின்ற வழியினையும் ஒரு கருவியாக ஏற்கிறோம்.

இவ்விரண்டு கருவிகளையும் தாண்டி, சொல்லறிவு ("ஸப்தப் பிரமாணம்") என்பதும் நமக்குத் தேவையாகிறது. இது, முன்னேயே அறிவார்ந்த ஒருவரால் தரப்பட்ட அறிவினைக் குறிப்பது. அப்படி "முன்னோர் அளித்த நல்லறிவு" எதுவோ, அதை ஆய்ந்து ஏற்றுக் கொண்டு, அதையே ஒரு அறிவுக் கருவியாகப் பயன்படுத்துதல் தேவையாகிறது. உலக அறிவியலிலும் இது முறையாக இருக்கிறது. இறைவனை உணருதல் எனும் பேரறிவிற்கு, வேதங்களே சொல்லறிவு ஆகும்.

"ஆத்ம வித்யா" எனும் அகவுணர்வியல் நம்முள் விளங்கும் ஆத்மனை உணர்த்துவது ஆகும். ஆத்மா புலனறிவிற்கும், மனதுக்கும் அப்பாற்பட்டது என்பதால், மேற்கூறிய நேரடி அறிவோ, அனுமான அறிவோ, நமக்கு முக்கியக் கருவிகளாக ஆகவே முடியாது. எனவே அகவுணர்வைத் தூண்ட, நமக்கு "ஸப்தப் பிரமாணம்" எனும் சொல்லறிவே முக்கியமானது. இதற்கு முன்னோர் அளித்த நல்லறிவாக, "வேதப்பிரமாணம்", "ஆகமப்பிரமாணம்" என்றெல்லாம் சொல்லப்படும், மறைகளின் அறிவு, நமக்கு அடிப்படையான அறிவுக் கருவியாக வேண்டும். எல்லா அறிவுக் கருவிகளையும் பயன்படுத்துவதனால், அறிவின் வலிமை அதிகமாகுமே தவிர, குறையாது. இதனைப் புரிந்து கொண்டால், வேதங்களின் அறிவினை, நமது அறிவுக் கருவியாக ஏற்க வேண்டியதன் பெருமையை நாம் உணரலாம்.

நாம் ஒருவேளை மறைகள் தரும் நல்லறிவினை ஏற்காமல் நிராகரித்து விட்டோமானால், பிறகு மீண்டும் அந்த விழைவுக்கான காலம் வரும்வரை, நமக்கு வேறு கதியே இல்லாமற் போய்விடும்! எனவேதான் வெள்ளத்தில் வீழ்ந்தவனுக்குக் கிடைத்த விழுதாக, வேதாந்தப் பொருளைக் கைப்பற்றி நாம் கரையேற வேண்டும்.

மறைகளின் கருத்தினை நாம் எப்படி நம்புவது - என நமக்கு ஐயம் வரலாம். "நம்பிக்கை" என்ற அடிப்படையில் நிற்பதல்ல மறைகள். குறிப்பாக வேதாந்தம் நம்மை புதியதாக எப்பொருளையும் நம்பச் சொல்வதல்ல! எவ்விதமான நம்பிக்கையையும் திணிப்பதல்ல! வேதாந்தம், இருப்பதை மட்டுமே குறிப்பது. உள்ளது எதுவோ அதைக் காட்டுவதே அதன் பயன்! அதில் நமக்கு ஈடுபாடு வேண்டும் என்பதே முக்கியத் தேவை. நம்பிக்கை என்பது வேறு, ஈடுபாடு என்பது வேறு.

“நம்பிக்கை” என்பது ஒன்றை அப்படியே உண்மை என ஏற்பது. “ஈடுபாடு” என்பது, ஒன்றை உண்மை என ஆய்வதில் முனைப்பும், அதற்கான வழிகளில் பிடிப்பும் கொள்வது. வேதாந்தம் நமது ஈடுபாட்டையே கேட்கிறது, நம்பிக்கையை அல்ல.

வேதாந்தம் காட்டுகின்ற வழி, நம்மால் எக்காரணத்தாலும், எப்போதும் மறுக்க முடியாத, எப்போதும் உள்ளதுமான ஒன்றை உணர்த்துவதுதான்! அதுதான் "நான்" என நம்முள் உயிர்த்திருக்கும் உணர்வு. "நான் இல்லை" என நம்மில் எவர் மறுக்க முடியும்! "நான் இருக்கிறேன்" என எவர்க்கேனும் நம்பிக்கை என்பது வேண்டுமா! "நான்" என நம்மை நினைவுபடுத்திக் கொள்ளவும் (மனதைப் பயன்படுத்த) தேவை இருக்கிறதா, என்ன!

எனவே நம்மால் மறுக்கவே முடியாத ஒன்றைப்பற்றிய, நம்மால் மறக்கவே முடியாத உண்மையினை முதலாக வைத்து, அதனையே ஆத்மாவென ஆராயத் தருகின்றது. அதில் ஈடுபாடு கொண்டு ஆத்மாவை உணருவதாலேயே பரமாத்மா என நாம் தேடும் இறைவனாக, ஆத்மாவே விளங்குவதையும் உணர வைக்கிறது.

எனவே கடந்துள்ளே காணும் கடவுள் நமக்குள்ளேயே இருக்கிறது என்பதால், எல்லா மனிதர்களையும் தூய்மையும், மேன்மையுமான ஒப்பற்ற சக்தியாக

வேதாந்தம் உயர்த்தி வைக்கிறது. ஈடுபாடு கொள்கின்ற எவருக்கும், அப்படிப் பெருமையைத் தருகின்ற, மிக உயரிய நிலையில் அமர்த்துகின்ற, வேறு எக்கல்வியும் தராத பெரிய விருதினை வேதாந்தம் மட்டுமே தருகின்றது.

எனவே வீணாண விவாதங்களை விட்டு, இறையுணர்வால் உள்ளத்துள் இயைந்து இருப்பதே நல்வாழ்க்கை என்பதையும், அதற்கு இறைவழிபாடு மட்டுமே நல்வழியாகிறது என்பதையும் இப்பாடல் மூலம் நாம் உணர்ந்து கொள்கிறோம்.

7

த்ரயீ ஸாங்க்$_2$யம் யோக$_3$: பஶுபதிமதம் வைஷ்ணவமிதி
ப்ரபி$_4$ன்னே ப்ரஸ்தா$_2$னே பரமித$_3$மத$_3$: பத்$_2$யமிதி ச |
ருசீனாம் வைசித்ர்யாத்$_3$ருஜுகுடில நானாபத$_2$ஜுஷாம்
ந்ருணாமேகோ க$_3$ம்யஸ்த்வமஸி பயஸாமர்ணவ இவ || 7 ||

**பொருள்:**

"மூன்று வேதங்கள் (த்ரயீ), சாங்கியம் (ஸாங்க்$_2$யம்), யோகம் (யோக$_3$:), சைவ நெறி (பஶுபதிமதம்), வைணவ நெறி (வைஷ்ணவம்)" - என (இதி) வெவ்வேறு (ப்ரபி$_4$ன்னே) தத்துவங்களில் (ப்ரஸ்தா$_2$னேன) இப்படியும் (இத$_3$ம் ச:) அப்படியும் (அத$_3$:), உயர்வான உண்மைக்கான (பரம்), பாதைகள் (பத்$_2$யம்) (இருக்கின்றன). ஈடுபாடுகொண்ட (ஜுஷாம்) மனிதர்களுக்கு (ந்ருணாம்), அவர்களது வெவ்வேறான (வைசித்ர்யாத்$_3$) விருப்பத்திற்கேற்ப (ருசீனாம்), நேரானதும், கோணலானதுமாக (ருஜு-குடில), வெவ்வேறு (நானா) பாதை (பத$_2$:) (அமைகிறது. எனினும்) கடலே (அர்ணவ:) எல்லா நதிகளின் (பயஸாம்) (குறிக்கோள்.) அப்படியே (இவ) நீவிரே (த்வம் அஸி) (எல்லோராலும் முடிவில்) அடையப்பட வேண்டிய ஒரே குறிக்கோள் (ஏக: க$_3$ம்ய:) ! (7)

முவ் வாகம  முறை சாங்கிய முதல் யோகமும் பலவும்
முதிர் சைவமும் முனை வைணவ முதலாகிய பிரிவும்
வெவ் வாகிய வே றாகிய விதி யா முறை வழியும்
விரி வாகவு குறு காகவும் பல பாதைக ளளியும்
எவ் வாறவர் சுவை யாகிடு மவ் வாறவர் பயணம்
என வாகிட நரமானிட ரவ ராட்படு மயணம்
அவ் வாறுகள் ஒவ் வாகினும் அடை வாகிடும் கடலே
அத னாலருட் கட லாமுனை அடை வாரது திடமே! (7)

குறிப்பு:

இறைவழிபாட்டின் பெருமையை உணர்ந்தாலும், இறைவனை உணர, வெவ்வேறு பாதைகளைச் சாத்திரங்களே தந்திருக்கிறதே எனும் கேள்வியையும், அதற்கான பதிலையும் ஆசிரியர் இப்பாடலில் தருகிறார்.

இறைச்சக்தி ஒன்று "இருக்கிறது" (அஸ்தி) என்ற கொள்கையை ஏற்றுக் கொண்டவர்களே "ஆஸ்திகர்கள்" ஆவார்கள். இருப்பினும், அவர்களுக்குள்ளும் சாங்கியம், யோகம், தர்க்கம், சைவம், வைணவம் என்றெல்லாம் பல வழிகள் இருப்பதால், உண்மையை மறந்து, "என் பாதையே சரியானது, மற்றது தாழ்வானது" எனும் பிரிவினைகளைக் காட்டிப் பலரும் வாதிடக்கூடும். அப்படியே வாதிடுபவர்களும் உண்டு.

வேறுபட்டவைபோலத் தோன்றினாலும், ஆஸ்திக சாத்திரங்கள் காட்டும் இப்பாதைகள் எல்லாமே ஒன்றாகிய பரம்பொருளிடமே நம்மைச் சேர்க்கின்றன. ஒருவேளை, அவற்றில் சில எளிதாயும் நேராயுமான பாதையாக இருக்கலாம், சில கடினமாகவும், சீரற்றதாயும் இருக்கலாம்.

எப்பாதையை நாம் தேர்ந்தெடுக்கிறோம் என்பது, நம் ஒவ்வொருவரின் மனத் தெளிவையும், அறிவின் உறுதியையும் பொருத்தே அமைவது. எப்படியாகினும்,

எல்லா நதிகளும் கடலிலேயே இறுதியில் கலப்பதுபோல, எல்லா நல்வழிகளும் இறைவனிடமே நம்மை இணைக்கின்றன.

அதனால் இறைவனைத் துதிக்கத் திருவுருவ வழிபாடு என்பதும் முக்கியமானது என்பதை, ஆசிரியர் அடுத்த பாடலில் தருகின்றார்.

8

மஹோக்ஷ: க$_2$ட்வாங்க$_3$ம் பரஶுரஜினம் ப$_4$ஸ்ம ப$_2$ணின:
கபாலம் சேதீயத்தவ வரத$_3$ தந்த்ரோபகரணம் |
ஸுராஸ்தாம் தாம்ருத்$_3$தி$_4$ம் த$_3$த$_4$தி து ப$_4$வத்$_3$ப்$_4$ரூப்ரணிஹிதாம்
ந ஹி ஸ்வாத்மாராமம் விஷயம்ருக$_3$த்ருஷ்ணா ப்$_4$ரமயதி || 8 ||

**பொருள்:**

வரமளிக்கும் பெருமானே (வரத:)! பெரிய காளைமாடு (மஹா உக்ஷ:), கபால நுகத்தடி (க$_2$ட்வாங்க$_3$ம்), கோடரி (பரஶு:), புலித்தோல் (அஜினம்), சாம்பல் (ப$_4$ஸ்ம), படமெடுக்கும் அரவங்கள் (ப$_2$ணின:) மற்றும் (ச) மண்டை ஓடு (கபாலம்) - என (இதி) இவைகள் மட்டுமே (இயத்) நினது (தவ) நுண்ணிய செயற் கருவிகளாகும் (தந்த்ர). இருப்பினும் (து), தேவர்கள் (ஸுரா: ) நினது உருவத்தை (ப$_4$வத்$_3$) புருவ மத்தியில் (ப்$_4$ரு:) தியானித்து (ப்ரணிஹிதாம்) வெவ்வேறு (தாம் தாம்) செல்வங்களைப் (ருத்$_3$தி$_4$ம்) பற்றிக் கொண்டனர் (த$_3$த$_4$தி). நிச்சயமாக, (ஹி), யார் (அவ்வாறு) தன்னுடைய (ஸ்வ) ஆத்மாவில் (ஆத்ம) திளைக்கிறார்களோ (அராமம்), அவர்களைக் கானல் நீராகிய (ம்ருக$_3$த்ருஷ்ணா) நிலையற்ற பொருட்களெல்லாம் (விஷய) கலைப்பதில்லை (ந ப்$_4$ரமயதி)! (8)

இட பாசன  தட வாகன நுக மாய்க்கழி யுடனும்
கட கோடரி சிர வோடெனச் சுடுசாம்பலு மிடவும்
பட நாகமு புலித் தோலணி எனவாகிய பலவும்
உட னானவ ரென வாயினும்  நினை வானவ ரவரும்
வர தாயக நின தாமுரு வர வாய்முனைப் புரு வம்
வதி வார்பல வள மாய் பல னடை வாரது சுலபம்
சிவ மானது தவ மாயனு பவ மாயுள தறிவர்
சிறி தாகிலும் விரி கானலில் சித றாதவர் முனிவர் !
(8)

குறிப்பு:

உருவம் இல்லாத இறைவனை வழிபடுவதற்கு, உருவ வழிபாடு என்பது ஒரு இன்றியமையாத பாதையாக இருக்கிறது. ஏனெனில் நம்முடைய அறிவினால், இறைவனின் உருவமிலாச் சிறப்பை உணர முடியாது.

உருவம், குணம் என எதுவுமற்ற பரம்பொருளை மனதில் இருத்த  நமக்குப் போதுமான முதிர்ச்சியும், உறுதியான அறிவும் எளிதில் அமைவதில்லை. அம்முதிர்ச்சி வரும்வரைக்கும்,  நமக்காக சாத்திரங்கள் தந்திருக்கும் பல வழிகளில், உருவ வழிபாடும் ஒன்று.  இறைச்சக்தியை நமது நல்விருப்பத்திற்கேப்ப உருவகப்படுத்தி (உருவத்தை அகப்படுத்தி) வணங்குதலே அதன் உண்மை ஆகும்.

தவக்கோலத்தில் பரசிவனைக் கண்டு, அவரது வியப்பான தோற்றத்தை ஆழ்ந்து தியானிக்கும் ஒரு செயலாலேயே, தேவர்களும், அசுரர்களும், முனிவர்களும் தாங்கள் விரும்பியதெல்லாம் அடைந்தார்கள். இவ்வுலகிலோ, வேறுலகிலோ பெற விழையும் இன்பங்களை, இறைவனை தியானிப்பதாலேயே அடைந்தவர்களின் வரலாறினைப் புராணங்கள் தருகின்றன.

ஆனால் பேருண்மையை உணர்ந்தவர்களுக்கு, அடையப்படுவன எல்லாம் அழியப்படுவன என்பது தெளியும் ஆதலால், அவர்கள் அவற்றை எல்லாம் கானல் நீரைப்போல பயனற்றதாக உணர்ந்து, அவற்றை விரும்பாமல், பேருண்மையான இறைவனையே தமது தவத்தின் பரிசாக விழைவார்கள்.

அதுவே மிக உயரிய பக்தி. அதையே ஸ்ரீ பகவத்கீதையும் காட்டுகிறது.

## 9

த்$_4$ருவம் கஶ்சித் ஸர்வம் ஸகலமபரஸ்த்வத்$_4$ருவமித$_3$ம்
பரோ த்$_4$ரௌவ்யா(அ)த்$_4$ரௌவ்யே ஜக$_3$தி க$_3$த$_3$தி வ்யஸ்தவிஷயே |
ஸமஸ்தே(அ)ப்யேதஸ்மின் புரமத$_2$ன தைர்விஸ்மித இவ
ஸ்துவன் ஜிஹ்ரேமி த்வாம் ந க$_2$லு நனு த்$_4$ருஷ்டா முக$_2$ரதா || 9 ||

**பொருள்:**

முப்புரங்களை அழித்தவரே (புரமத$_2$ன:)! சிலர் (கஶ்சித்) எல்லாமும் (ஸர்வம்) நிலையானது (த்$_4$ருவம்) என்பர்; ஆனல் (து), மற்றவர்கள் (அபர:) இந்த எல்லாமும் (இத$_3$ம் ஸகலம்) நிலையற்றது (அத்$_4$ருவம்) என்பர்; பிறர் (பர:) இவ்வுலகைப் பொறுத்தவரை (ஜக$_3$தி) இதில் அடங்கிய வெவேறான பல பொருட்களும் (வ்யஸ்த) குணங்களும் (விஷயே), நிலையற்றதாயும் (அத்$_4$ரௌவ்யே), நிலையானதாயும் (த்$_4$ரௌவ்யா) இருப்பன என முழங்குவர் (க$_3$த$_3$தி). அதனால் (இவ), இப்படைப்பில் அடங்கும் (அபி ஏதஸ்மின்), எல்லாவற்றையும் (ஸமஸ்தே) பற்றிய இக்கருத்துகள் எல்லாம் (தை:) வியப்பானதாய் இருக்கின்றன (விஸ்மித:). (எனினும்) நின்னைத் (த்வாம்) துதிப்பதில் (ஸ்துவன்), நான் வெட்கம் அடையவில்லை (ஜிஹ்ரேமி .... ந). (மாறாக நினது பெருமைகளைப்)

பேசுவதில் (முக$_2$ரதா) (யான்) பிடிவாதமுடன் (த்$_4$ருஷ்டா) இருப்பதே உண்மை (க$_2$லு நனு)! (9)

சில ராவையும் நிலை யானவை யென வாதிட லுண்டு
பிற ரோயவை பிற ழாலனவை யென வோதிட லுண்டு
உல காவிலும் பொரு ளாவையும் குண மாறிட லென்று
பல வாயறி வத னாலவை நிலை யாம்நிலை அன்று!
அத னாலிதில் எது தானினி கரு வாவது விந்தை!
அவை யாவிலு மித மேதுன தரு ளானது சிந்தை!
பர மாகிய சிவ மேயொரு தர மாகிலும் வெட்கப்
பட லேனது பிடி வாதமுட் புர மூவழி அரனே!
(9)

**குறிப்பு:**

உருவ வழிபாட்டு முறைகளில் பல வேறுபாடுகள் இருந்து, அவற்றை விவாதிப்பதைப் போலவே, தத்துவ ஆராய்ச்சி என்ற பெயரில், உலகம் நிலையானதா, நிலையற்றதா என்றெல்லாம் பலவிதக் காரண காரியங்களைக் காட்டி, அறிவாளிகள் வாதிப்பதும் குழப்பத்தைத் தருகின்றன. பேருண்மையை உணர்ந்த புஷ்பதந்தருக்கோ, இத்தகைய விவாதங்கள் வியப்பையே அளிக்கின்றன! எல்லாப் பாதைகளும் ஒன்றே, எல்லா இறைவடிவங்களும் ஒன்றே என்று மனத்தெளிவும், மதியுறுதியும் பெற்ற புஷ்பதந்தருக்கு, அறிவுச் சுமையால், வீணே வாதிடும் பெருமை ஏற்புடையதாக இல்லை. எனவே, தன்னை அறிவுடன் வாதிடத் தெரியாதவன் என உலகம் நினைத்தாலும் பரவாயில்லை, இக்குழப்பத்தில் ஈடுபடாமல், இறைவனைப் பணிந்து துதிப்பதில் மட்டுமே, தமது வாழ்வை அர்ப்பணிக்கத் தாம் வெட்கப்படவில்லை என்றும் அப்படி அடிபணிந்து இறைவனைத் துதிக்கின்ற உறுதியிலிருந்து தாம் மாறப் போவதுமில்லை என்றும்

ஆசிரியர் இப்பாடலில் கூறுகின்றார். என்னே அவரின் நல்லுறுதி !

புஷ்பதந்தர் இனிவரும் பாடல்களில், சிவபுராணத்தில் காட்டப்பட்ட திருவிளையாடல்கள் சிலவற்றை நினைவுகூர்ந்து, அவற்றை ஒட்டி, சிவபெருமானின் பெரும் புகழை எல்லாம் மீண்டும் மீண்டும் போற்றுகின்றார்.

பரசிவனை - அயனும், அரியும் அடி முடி காணாமல் தேடிய பரம்பொருள் என்றும், இராவணன், பாணாசுரன் போன்ற அடியார்களின் கெடுமதியையும் அவித்து நற்கதி அருளிய அருளாளன் என்றும், அமிர்தம் கடைகின்ற போது அஞ்சி ஓடிய அமரர்களுக்கும், அசுரர்களுக்கும் அருள் தர, ஆலஹால விஷத்தை அருந்திய தியாகசீலர் என்றும், காமனை வென்ற தீரன் என்றும், களிப்பால் ஊழி நடமாடிய பெரும் தாக்கம் என்றும், வான்வெளியாய் விரிந்த மின்னொளியே உயிரளிக்கும் கங்கை நதியாய் பூமியில் பிறக்கத் தன் தலையில் முடிந்தளித்த தலைவன் என்றும், முப்புரம் அழித்த முதல்வன் என்றும், ஓர் கண்ணையே மலராகத் திருமால் உவந்து அளிக்கப் பூஜை பெற்ற அண்ணல் என்றும், வினைப் பயனளிக்கும் வேந்தன் என்றும், தக்ஷனை நசித்துத் தான் எனும் செருக்கினைப் புசித்த தீபம் என்றும், பிரம்ம தேவரின் பொல்லாத ஆசையை இல்லாது செய்த ஈசன் என்றும், அன்னை உமையாள் காதலால் உருகி அணைக்கும் அண்ணல் என்றும் - பலவிதமாகப் புகழ்மாலை சூட்டுகின்றார்.

வேதப் பொருளை உலகிற்கு எப்போதும் நினைவூட்டவே புராணங்கள் உள்ளன. "புராணம்" என்ற சொல்லுக்கே, "புர நவ அபி" – அதாவது பழமையானதாயினும், புதுமை மாறாத கருத்துக்களை எப்போதும் தருவது எனப் பொருள். அவை வரலாற்றையும், கதைகளையும் கலந்து, பரம்பொருளை, வரித்த ஓர் குறிப்பிட்ட வடிவத்தினால்

ஆராதித்து, அவ்வடிவிலேயே இறைவன் யாவரிலும் உயர்வாய் இருக்கின்றார் எனும் வகையிலே அமைந்திருப்பவை. அவற்றின் ஒரே நோக்கம், மாறாத உண்மையான பரம்பொருளை நமக்கு எப்போதும் போதிப்பதுதான்.

சிவபுராணம் பரம்பொருளைச் சிவபெருமானாகக் கண்டு ஆராதிக்கிறது என்றால், விஷ்ணுபுராணம் பரம்பொருளைத் திருமாலாகவும், அது போலவே விநாயகபுராணம் விநாயகர் வடிவினையும், கந்தபுராணம் முருகப் பெருமானின் வடிவினையும், சக்திபுராணம் அன்னையின் வடிவினையும் – இப்படி எடுத்த வடிவங்களை முதன்மைப் படுத்தியே புராணக்கதைகளை அமைத்து, அவற்றினூடே மாறாத மறைபொருள் உண்மையினைத் தருகின்றன.

எப்படி ஒரே மனிதரை, அப்பா, அண்ணா, மகன், கணவன், நண்பன், ஆசிரியன் என்றெல்லாம் ஒவ்வொருவரும் பார்த்து, அவர்களது உறவிற்கேற்ப உயர்வாய்ப் போற்றுவார்களோ, அப்படியே ஒன்றேயான பரம்பொருளையே, ஒவ்வொரு புராணமும் உயர்த்திக் காட்டி, அதன் வழியாக வேதங்களின் உட்பொருளை அளிக்கின்றது. எனவே இப்பாடல்களில் பரசிவ வணக்கமாக, ஈரற்றதான பரமாத்மாவையே ஆசிரியர் புகழ்ந்து துதிக்கிறார்.

10

தவைஶ்வர்யம் யத்னாத்$_3$ யது$_3$பரி விரிஞ்சிர்ஹரிரத$_4$:
பரிச்சே$_2$தும் யாதாவனலமனலஸ்கந்த$_4$வபுஷ: |
ததோ ப$_4$க்திஶ்ரத்$_3$தா$_4$-ப$_4$ரகு$_3$ரு-க்$_3$ருணத்$_3$ப்$_4$யாம் கி$_3$ரீஶ யத்
ஸ்வயம் தஸ்தே$_2$ தாப்$_4$யாம் தவ கிமனுவ்ருத்திர்ன ப$_2$லதி || 10 ||

**பொருள்:**

நினது (தவ) தீத்தூண் (அனலஸ்கந்த$_4$) வடிவத்தின் (வபுஷ:) பெருமையை (ஐஶ்வர்யம்) அளக்க (பரிச்சே$_2$தும்), பிரம்மதேவன் (விரிஞ்சி: ) மேலேயும் (யத்$_3$ உபரி) திருமால் (ஹரி:) கீழேயும் (அத$_4$:) பெருமுயற்சியுடன் (யத்னாத்$_3$) பயணித்தும் (யாதெள), பயனளிக்காமல் (அனலம்), பிறகு (ததஸ்) அளவில்லாத (கு$_3$ரு ) உயர்ந்த பக்தி (ப$_4$க்தி ப$_4$ர), தீவிர ஈடுபாடு (ஶ்ரத்$_3$தா$_4$) இவ்விரண்டுடனும் (தங்களைத்) துதித்ததால் (க்$_3$ருணத்$_3$ப்$_4$யாம்), ஓ மலையரசே! (கி$_3$ரீஶ:), அவர்களுக்கு முன்னால் (தாப்$_4$யாம்) (நினது அருளாகிய) அது (யத்) அவர்களுக்குள்ளேயே (ஸ்வயம்) உணரப்பட்டது (தஸ்தே$_2$). நினது மகிமையில் (தவ) பணிந்திருந்தால் (அனுவ்ருத்தி:) பலனில்லாமல் போகுமா என்ன (ந ப$_2$லதி கிம்)! (10)

தட மாயடி முடி யாதருட் தண லாகிய அரனை
தகை யாதென வகை யாமிகை தரவாதிட முயல
அய னார்முடி அரி யாரடி அலை வார்பிற ககல
அட வாயடி யடை வார்மிக வன் பாயது முகிழ
திட மாகிட மன மேடையுள் தெளி வாயவ ரறிய
திற வாதது திர ளாகிட அரு ளாகிய கருணை
சிவ நாமமும் புக ழாரமும் ஜெப மாகிடின் பரிசு
பல னாகிடு மில தாகுமோ பர மாமலை அரசே!
(10)

**குறிப்பு:**

இப்பாடலில், சிவபெருமான் அடிமுடியறியாத் தீத்தூணாக நின்றபோது, பிரம்மதேவரும், திருமாலும், முதலும் முடிவும் இல்லாப் பரம்பொருளை அறிவால் அளக்க முடியாது என்பதை உணர்ந்து, அவரை அன்பால் உள்கி,

தன்னுள்ளேயே ஆத்மனாக அப்பரம்பொருளை உணர்ந்து பயனுற்றனர் எனும் கருத்தை ஆசிரியர் தருகின்றார்.

பக்தி எனும் அன்பு ஈர்ப்பும், சிரத்தை எனும் தீவிர ஈடுபாடும் உடனிருந்தால் மட்டுமே, கானல் நீரான உலக இன்பத்தைத் துறந்து, பேருண்மையான என்னும் நிலையான சுகத்தை அடைய முடியும் என்பதையும் இப்பாடல் காட்டுகின்றது.

இப்பாடலில் பரசிவம், முதலும் முடிவுமற்றதாக இருந்த புராண நிகழ்ச்சியை ஆசிரியர் காட்டியுள்ளார். "முதலானது", "முடிவானது" என்றால் என்ன?

ஒரு பொருள் "முதலானது" என்றால், அதற்கு முன் எதுவும் இல்லாமலும் அதற்குப் பிறகு ஏதேனும் ஒன்றாவதும் இருக்க வேண்டும். அப்போதுதான் அப்பொருள் "முதலானது" என்று சொல்லலாம்.

அதேபோல் ஒருபொருள் "முடிவானது" என்றால், அதற்குப் பிறகு எதுவும் இல்லாமலும், அதற்கு முன் ஏதேனும் ஒன்று இருந்தாகவும் வேண்டும். பரசிவம் "ஆதியும் அந்தமும் இல்லா அரும்பொருள்" என்றால், அதன் ஆழ்பொருள் என்ன? இறைவனுக்கு முன்னும் எதுவுமில்லை, பின்னும் எதுவும் இல்லை, அப்படியாயின் இடையிலும் இறைவனைத் தவிர எதுவும் இருப்பதில்லை, ஆகவே இருந்தன, இருப்பன, இருக்கப்போவன எல்லாமும் இறைவனே, அதனால் வேதாந்த உண்மையான "அத்வைதம் சத்தியம்" !

11

அயத்னாதா$_3$ஸாத்$_3$ய த்ரிபு$_4$வனமவைரவ்யதிகரம்
த$_3$ஶாஸ்யோ யத்$_3$பா$_3$ஹூனப்$_4$ருத ரணகண்டூ$_3$-பரவஶான் |
ஶிர:பத்$_3$மஶ்ரேணீ-ரசிதசரணாம்போ$_4$ருஹ-ப$_3$லே:
ஸ்தி$_2$ராயாஸ்த்வத்$_3$ப$_4$க்தேஸ்த்ரிபுரஹர விஸ்பூ$_2$ர்ஜிதமித$_3$ம் || 11 ||

**பொருள்:**

முப்புரங்களை அழித்தவரே (த்ரிபுரஹர)! மூன்று உலகங்களையும் (த்ரிபு$_4$வனம்) எளிதாக (அயத்னாத்$_3$) எதிரிகளின் தாக்குதல் இல்லாதபடி (அவைர வ்யதிகரம்) தனது கரங்களால் (யத்$_3$பா$_3$ஹூன்) ஆளுமை செய்தும் (பரவஶான்) அப்படிச் செய்த பிறகும் (ஆஸாத்$_3$ய), போரிட வேண்டும் எனும் ஈர்ப்பிலேயே இருந்த (ரணகண்டூ$_3$) பத்து வாய்களைக் கொண்டவனுடைய (த$_3$ஶாஸ்யோ) உறுதியான (ஸ்தி$_2$ராயா:) பக்தியே (ப$_4$க்தே:), (அவன் தனது) தலைகளையே தாமரைகளாக (ஶிர:பத்$_3$ம), நினது (த்வத்$_3$) திருவடித் தாமரையில் (சரண அம்போ$_4$ருஹ) பலியாக (ப$_3$லே:), வரிசையாக (ஶ்ரேணீ) அர்ப்பணிக்கும்படி செய்தது (ரசித ப்$_4$ருத)! அந்த அன்பின் வெளிப்பாடு (இத$_3$ம்) ஒரு கணத்திலேயே நடந்து விட்டது (விஸ்பூ$_2$ர்ஜிதம்). (11)

எதி ராளிக ளதி காரிக ளெவ ராயினு மழிய
தன தாளுமை என மூவுல கர சாகினும் விசர
மதி யாலெவ ரெதி ராளிய ரென வாயமர் புரிய
புக லாயுனை தச வாயதி புவ னாதிப னசுரன்
கதி யாயுன தடி யாமல ரடி யாய்முடி யணிவன்
கலை யாமதி தலை யாமலர் பலி யாயடி பணிவன்
நிதி யாமிது நொடி யாயிட நிஜ மாயது நேயம்
நிழ லாகிய புர மூன்றழி நித மாகிய சிவனே!
(11)

**குறிப்பு:**

இப்பாடலில், மற்றொரு சிவபுராண நிகழ்ச்சி காட்டப்படுகிறது. சிவபக்தனாகிய இராவணன், எல்லா உலகங்களிலும், எல்லா வெற்றிகளையும் அடைந்திருந்தாலும், தன்னையே வெற்றி கொள்ளவில்லை.

அதாவது, அவனது ஆணவமும், ஆசையும் அவனை ஆட்டி வைத்தன. அதனால், புகழ்ச்சிக்காக மேலும் மேலும் உலக வழக்கில் ஈடுபட்டுப் போரிட்டிருக்க ஆசை கொண்டான். தன்னுடைய பக்தியைக் காட்ட, சிவனடிகளுக்குத் தனது தலைகளையே வெட்டி அளிக்கவும், அவன் சிறிதும் யோசிக்கவில்லை.

இதனைச் சுட்டிக்காட்டி, புஷ்பதந்தர், எப்படி எல்லாம் பக்தியின் ஆழம் வெளிப்படுகிறது என்பதையும், ஆனால், பக்தியின் நோக்கம், புறப்பொருளுக்காகவே என்று கொள்ளப்பட்டால், அதனால் நிலையான சுகம் கிடைப்பதில்லை என்பதையும் காட்ட, இராவணனின் ஆழ்ந்த பக்தியையும், அதே சமயம் கேடான அவனது ஆணவத்தையும் சுட்டிக் காட்டுகிறார்.

12

அமுஷ்ய த்வத்ஸேவா-ஸமதி$_4$க$_3$தஸாரம் பு$_4$ஜவனம்
ப$_3$லாத் கைலாஸே(அ)பி த்வத$_3$தி$_4$வஸதௌ விக்ரமயத: |
அலப்$_4$யா பாதாலே(அ)ப்யலஸசலிதாங்கு$_3$ஷ்ட$_2$ஶிரஸி
ப்ரதிஷ்டா$_2$ த்வய்யாஸீத்$_3$ த்$_4$ருவமுபசிதோ முஹ்யதி க$_2$ல: || 12 ||

**பொருள்:**

நினது (த்வத்) தொண்டினால் (ஸேவா) வலிமை (ஸாரம்) கிடைக்கப் பெற்றவனான (ஸமதி$_4$க$_3$தம்) (இராவணன்) நினது (த்வத்) இருப்பிடமாகிய (அதி$_4$வஸதௌ), திருக்கயிலாய மலையையும் (கைலாஸே அபி), (தனது) காட்டினைப் போன்ற கரங்களின் (பு$_4$ஜ வனம்) வலிமையினால் (ப$_3$லாத்) ஆக்கிரமித்ததால், (விக்ரமயத:) எவ்வித முயற்சியும் இல்லாமல் (அலஸ), நினது (த்வயி) கால் கட்டைவிரல் (அங்கு$_3$ஷ்ட$_2$) நுனியின் அசைவினால்(ஶிரஸி சலித), அக்கொடியவனுக்கு (அமுஷ்ய), கீழான உலகத்திலும் (பாதாலே அபி) இடம்

(ப்ரத்ஷ்டா₂) இல்லாமல் போனது (அலப்₄யா ஆஶீத்₃). நிச்சயமாக (த்₄ருவம்), கொடியவன் (க₂ல:) வளமைச் செருக்கினால் (உபசித:) மதி மயக்கம் அடைகிறான் (முஹ்யதி). (12)

பணி வாலுன தடி யார்பய னடை வாரது உண்டு
பல வானுன தக மாமலை பரி சாகிட வென்று
துணி வாலட வன மாங்கர துணை யாவன கண்டு
துளி யாயினு முய லாதடி நுனி யாகிய சென்டு
அதி ராதரு மிடி யாகிட அகங் காரிடர் விண்டு
அத னாலிட ரிடு வாரிட மில ராய்ப்பட லுண்டு
விதி யாமிது விட மாகிய வள மாணவங் கொண்டு
விடு வானிட ரடை வான்மதி விளங் காதவ ரென்றே!
(12)

குறிப்பு:

இறைவனிடம் பக்தி மிகுந்திருந்தாலும், தூய்மையான மனம் இல்லாத காரணத்தாலும், ஆணவம் மிகுந்திருந்ததாலும், இறைவனது தவமிடமான கயிலை மலையினையே, பெயர்த்து அகற்ற முயன்றான் இராவணன். ஆனால், மிக எளிதில் அவனைக் கீழுலகங்களுக்கும் கீழாகத் தள்ள இறைவனுக்கு எம்முயற்சியும் வேண்டியிருக்கவில்லை. தன் கால்விரல் நுனியிலேயே அவனது செருக்கினைக் கீழ்த்தள்ளினார்.

அருட்செல்வத்தைத் தேடுபவருக்கும், பொருளாலோ, புகழாலோ செருக்கு எழுந்துவிட்டால், அதனால் தவறான பாதையில் அன்னார் பயணிக்க நேரிடலாம். அப்போதெல்லாம், கருணையால் இறைவனே முன் வந்து, அவர்களின் குறைகளைக் கண்டித்து நல்வழிப்படுத்துவார்.

இராவணனின் ஆணவத்திற்குப் பாடமாகவும், அவனது பக்திக்குப் பரிசாகவும், தனது திருவடிகளை அவனது

முடியினில் பதித்து அருளைக் கொடுத்த இறைவனின் நற்கருணையை இப்பாடல் காட்டுகிறது.

ஆதலால், வாழ்வில் நாம் சந்திக்கும் எல்லாத் தடைகளையும், துயரங்களையும் இறைவனது கருணையால் நாம் அடைகின்ற படிகள் எனக் கருதி, அவற்றைத் தவிர்த்து விலகாமல் ஏற்றுக் கடந்து முன்னேற வேண்டும். ஏனெனில் இறைவன் "கர்ம பல தத்தா". அதாவது, நமது முயற்சிக்கும், நோக்கத்திற்கும், ஏற்ற பலனைச் சரியாகத் தருபவர். அது நமது தவறுகளுக்குத் தருகின்ற தண்டனையாக இருப்பினும், அதுவும் இறைவனது கருணையே என்பதை நாம் மறக்கக்கூடாது.

மேலும் நற்பலனும், தேவைக்கு அதிகமான வளமும் கிடைத்துவிட்டது என்றால், ஆணவமும் வந்துவிடக்கூடும் என அஞ்சியே, சான்றோர்கள் இறைவனிடம் உலக வாழ்க்கைக்குத் தேவையான அடிப்படை நலத்தினை மட்டுமே நாடி, மற்றபடி, தமது வாழ்வினை இறைவனின் அரிதான பேருண்மையை உணர்வதற்கான அருளைப் பெறுவதற்கே அர்ப்பணிக்கிறார்கள்.

அப்பேருண்மையை விழையாமல், வீணான புகழையும், உலக வளத்தையும் நாடுபவர்களுக்கும் இறைவன், துன்பத்தைக் கொடுத்தாவது கருணையையே முடிவில் செய்கிறான் என்பதை இராவணன், பாணாசுரன் முதலியோரின் வரலாறுகளைச் சுட்டிக்காட்டி ஆசிரியர் விளக்குகின்றார்.

13

யத்3ருத்3தி4ம் ஸுத்ராம்ணோ வரத3 பரமோச்சைரபி ஸதீம்
அத4ஶ்சக்ரே பா3ண: பரிஜனவிதே4யத்ரிபு4வன: |
ந தச்சித்ரம் தஸ்மின் வரிவஸிதரி த்வச்சரணயோ:
ந கஸ்யாப்யுன்னத்யை ப4வதி ஶிரஸஸ்த்வய்யவனதி: || 13 ||

**பொருள்:**

வரமளிப்பவரே (வரத$_3$)! பாணாசுரன் (பா$_3$ண:), மூன்று உலகங்களையும் (த்ரி பு$_4$வன:) தமது பணியாட்களாக (பரிஜன) அடக்கி (விதே$_4$ய), இந்திரனின் (ஸுத்ராம்ண:) செல்வத்தை விடவும் (ருத்$_3$தி$_4$ம் அபி) மிக அதிகமுடையவனாய் (உச்சை:), கீழுலக (அத$_4$ஃ) மன்னனாக (சக்ரே), சிறப்பாக (பரம) இருந்தது (ஸதீம்) எதனால் என்றால் (யத்$_3$), அது (தத்$_3$) வியப்பானது இல்லை (ந சித்ரம்)! (ஏனெனில்) அவ்வசுரன் (தஸ்மின்) தொழுதது (வரிவஸிதரி) நினது (த்வத்) திருவடிகளை (சரணயோ:) அல்லவோ! நின்னைத் (த்வயி) தலை (ஶிரஸ) குனிந்து பணிவதால் (அவனதி:) எந்தச் செல்வத்தைத்தான் (கஸ்யை அபி உன்னத்யை) அடைய முடியாது (ந ப$_4$வதி)! (13)

தள மூவுல குள ராயெவ ரவ ராவரும் பணிய
தள ராநிதி வள மாகிடச் சுர வான்பதி மிரள
அள வாகிட முடி யாதன என வாகிய செழுமை
அத பாதள வுல காசுர னது பாணனி னருமை
அதி லேயதி சய மானது அணு வாவது முளதோ!
அவ னாற்பணி விடை யானது நின தாளடி அலவோ!
வர மாயருள் சிவ னாரடி வடி வாய்த்தலை குனிய
வழி பாடிய வழி யாலெது வகை யாதெது வரதா!
(13)

**குறிப்பு:**

இப்பாடலில், பாணாசுரனைச் சார்ந்த சிவபுராண நிகழ்ச்சி காட்டப்படுகிறது.

பாணாசுரன் என்பவன், அசுரனாக இருப்பினும், சிவபெருமானையே முற்றிலும் பணிந்து துதித்து,

அவருடைய அருளினால் எல்லாவிதப் பயனும் பெற்று, எல்லா உலகங்களையும் வென்று, தன்னுடைய நிலமாகிய கீழுலகில் அரசாட்சி செய்து வந்தான். மிக உறுதியான பக்திக்கு எடுத்துக்காட்டாக விளங்கிய பாணாசுரன், கேட்டதெல்லாம் இறையருளால் கிடைக்கப் பெற்று வாழ்ந்தான். அவன் இருந்த உலகம் கீழான உலகம் எனினும், அவன் விரும்பிய வாழ்க்கையை, மிகச் சிறப்பாக வாழ்வதற்கு இறைவன் அருளினார்.

இறைவனையே, தன்னுடைய உலகத்தைக் காக்கும் காவலானாக நியமிக்கும் ஆளுமையையும் சிவபெருமான் பாணாசுரனுக்கு அருளினார். ஆனாலும், பேருண்மையை நாடாமல், மனதின் போக்கிற்கு அடிமையாகிச் சீர்மை கெட்ட பாணாசுரனுக்கு நல்வழி காட்ட, அவனுடைய பிறவியின் முடிவையும், திருமாலின் அருட்கரங்களால் பெறச் செய்து சிவபெருமான் நற்கதி அளித்தார். புஷ்பதந்தர்,

இவ்வெடுத்துக்காட்டின் மூலம், எந்த மனிதனும், எத்தகைய பிறப்பினைப் பெற்றிருந்தாலும், பரசிவத்தினைப் பணிவதால், எல்லாச் செல்வத்தையும் அடையலாம் எனவும், இறுதியில் நல்வழியிலேயே இணையலாம் எனவும் காட்டுகின்றார்.

14

அகாண்ட$_3$-ப்$_3$ரஹ்மாண்ட$_3$-க்ஷயசகித-தே$_3$வாஸூரக்ருபா
விதே$_4$யஸ்யா(அ)(அ)ஸீத்$_3$ யஸ்த்ரினயன விஷம் ஸம்ஹ்ருதவத: |
ஸ கல்மாஷ: கண்டே$_2$ தவ ந குருதே ந ஶ்ரியமஹோ
விகாரோ(அ)பி ஶ்லாக்$_4$யோ பு$_4$வன-ப$_4$ய- ப$_4$ங்க$_3$- வ்யஸனின: || 14 ||

**பொருள்:**

முக்கண்ணரே! (த்ரினயன)! உலகங்களுக்கு (ப்$_3$ரஹ்மாண்ட$_3$) எதிர்பாராத (அகாண்ட$_3$) அழிவு (க்ஷய) வந்துவிட்டது என அஞ்சிய (சகித) தேவர்களுக்கும் (தேவா) அசுரர்களுக்கும் (அசுர) (உதவுவதற்காகவே) பொங்கி வந்த (விதே$_4$யஸ்ய) கருணையினால் (க்ருபா), நீவிர் ஏற்றுக்கொண்ட (ஸம்ஹ்ருதவத:) கொடிய நஞ்சு (விஷம்); அதனாலேயே (ய:) அந்த (ஸ: ) நீலக்கறை (கல்மாஷ:) நினது (தவ) கழுத்தில் (கண்டே$_2$) ஏற்பட்டது (ஆஶி த்$_3$) நிச்சயமாக (ந ந) (அது நின்னை) அலங்கரிக்கிறது (குருதே ஶ்ரியம்). ஆஹா! (அஹோ)! உலகில் (பு$_4$வன) அச்சத்தை (ப$_4$ய) அறவே அழிப்பதில் (ப$_4$ங்க$_3$) விருப்பமுள்ளவரின் (வ்யஸனின:) கறைகள்கூட (விகாரோ அபி) (களங்கமற்றவை) போற்றத்தக்கதே (ஶ்லாக்$_4$யோ )! (14)

அழி வாலினி உல காமென அனலாகிட நஞ்சு
அக லாதென அம ராதிய ரசு ராதிப ரஞ்ச
வழி யாயினி விழி யாலருள் வழிந் தூறிய கருணை
வர வால்கொடு விட மாவையும் உண வாகிய தருமை
அத னால்கறை சிவ னார்கழுத் துள நீலமு மகிமை
அழ காகிடு மலங் காரமு மது வானது மியலே!
துய ராற்பட அயற் வார்துணை எவ ராயினு முலகில்
அவ ராற்படு கறை யானது மழ காமுவ் விழியோய்!
(14)

**குறிப்பு:**

இப்பாடலில், ஆலகால விஷத்தைச் சிவபிரான் அருந்திய சிவபுராண நிகழ்ச்சி எடுத்துக் காட்டப்படுகிறது. ஆலகால விஷத்தினால் யாவும் அழிந்துவிடும் என அஞ்சிய உலகங்களை எல்லாம் காக்க, அவ்விஷத்தைக் கருணையால் ஏற்று அருந்திய சிவபெருமானின் கழுத்து,

விஷத்தின் தாக்கத்தினால் கருத்துப் போய்விட்டதாம். ஆனால், புஷ்பதந்தரின் கவி உள்ளத்துக்கோ, தியாகம் செய்கின்ற எவருடைய களங்கமும் ஓர் அழகே எனத் தோன்றுகிறது.

அமிர்தம் கடைகின்ற இச்சிவபுராணக் கதையில் ஆழ்ந்த தத்துவங்கள் பல உள்ளன.

மேரு மலையை மத்தாகவும், வாசுகியெனும் பாம்பினைக் கயிறாகவும் கொண்டு, தேவர்கள் பாம்பின் வாலையும், அசுரர்கள் பாம்பின் தலையையும் பிடித்துக் கொண்டு, பாற்கடலைக் கடைகிறார்கள். அவர்களது நோக்கமே, கடைந்தெடுக்கத் திரளும் செல்வங்களையும், அமிர்தத்தினையும் அனுபவிக்க வேண்டும் என்பதுதான். அப்படி வரும் செல்வங்களை எல்லாம் கைக்கொண்டவர்கள், ஒரு நேரத்தில் பாம்பின் கொடிய ஆலகால விஷம் உமிழப்பட்டவுடன், எல்லா உலகங்களுக்கும் அழிவு வந்ததோ எனும் அச்சம் பெருக எங்கும் பதறி ஓடினர்.

அப்போது கருணையினால் சிவபெருமான் அவ்விஷத்தை ஏற்று விழுங்க, சிவபெருமானின் உள்ளும் வெளியும் எல்லா உலகங்களும் இருப்பதால், அவர் உட்கொண்ட விஷத்தால் அவருள் உள்ள உலகம் அழியுமோ எனக் கருணையால் அன்னை சிவபெருமானின் கழுத்தைத் தமது கரங்களால் பிடிக்க, விஷம் சிவபெருமானின் கழுத்திலேயே நின்று விட்டதாம். அதனால் நீலகண்டராக, கருத்த கழுத்துடன் சிவபெருமான் இருக்கிறார். அதுவும் அழகுதான் என ஆசிரியர் இப்பாடலில் புகழ்கிறார்.

நமது மனமே கடையப்படும் கடல். நம் அறிவே கடைவதற்கான மலை. "நான்" எனும் ஆணவமே கடைவதற்கு உதவும் கயிறாகிய பாம்பு. தேவர்களே நமது நற்குணங்கள். அசுரர்களே தீக்குணங்கள். நன்மைக்கும் தீமைக்கும் இடையே அல்லல்படும் அறிவின் இழுப்பே கடைகின்ற செயல். அதனால் உராயப்பட்டு உமிழும் பெருவிஷமே, ஆணவமலம். அதுவே அழிவுக்குக் காரணம்.

அளவற்ற கருணையால், சிவபெருமானே, அந்த விஷத்தைத் தடுத்தாட்கொண்டு, நமக்கு அருளைத் தருகின்றார்.

“நான் யார்” என்பதை உணராத அறியாமையே நம்முடைய ஆணவத்திற்கும், அதன் விளைவாக நாம் அனுபவிக்கும் எல்லாத் துயரங்களுக்கும் காரணம் ஆகிறது. எனவே ஆணவமாகிய பெரிய இடரை நம்மிடமிருந்து அகற்றி நம்மைத் தன்னுள் ஈர்ப்பவன் சிவபெருமான் என்பதையே இப்பாடல் உணர்த்துகின்றது. தந்நல ஆசையால் பாற்கடல் கடைந்தவர்களின் கதையினைக் கூறி, பரசிவத்தைப் புகழ்ந்த புஷ்பதந்தர், ஆசையின் வடிவமான காமதேவனுக்கு விளைந்த துயரை அடுத்த பாடலில் மேற்கோள் காட்டுகிறார்.

15

அஸித்$_3$தா$_4$ர்தா$_2$ நைவ க்வசித$_3$பி ஸதே$_3$வாஸுரனரே
நிவர்தந்தே நித்யம் ஜக$_3$தி ஜயினோ யஸ்ய விஶிகா$_2$: |
ஸ பஶ்யன்னீஶ த்வாமிதரஸுரஸாதா$_4$ரணமபூ$_4$த்
ஸ்மர: ஸ்மர்தவ்யாத்மா ந ஹி வஶிஷு பத்$_2$ய: பரிப$_4$வ: || 15 ||

**பொருள்:**

இறைவா (ஈஶ)! தேவர்கள் (தே$_3$வா), அசுரர்கள் (அஸுர) *(மற்றும்)* மனிதர்களால் (நரே) அமைந்த (ஸ) உலகங்களில் (ஜக$_3$தி), யாருடைய (யஸ்ய) அம்புகள் (விஶிகா$_2$:) எப்போதும் குறி தவறாமல் (அஸித்$_3$தா$_4$ர்தா$_2$ .... நிவர்தந்தே) எவரையும் விடாமல் (ந ஏவ க்வசித$_3$பி) எப்போதும் (நித்யம்) வெற்றியடைகின்றன (ஜயின:) எனக் கண்டானோ (பஶ்யன்) அந்தக் காமதேவன் (ஸ:), தங்களையும் (த்வாம்) மற்ற (இதர) தெய்வங்களைப் போல (ஸுர), சாதாரணமானவர் (ஸாதா$_4$ரணம்) (என எண்ணிச் செயல்பட்ட காரணத்தால், வெறும்), நினைவாக (ஸ்மர:) ஆகிவிட்டான் (அபூ$_4$த்). தன்னுள் விளங்கும் ஆத்மாவில்

(ஸ்மர்தவ்ய-ஆத்மா) ஒன்றி இருப்பவரிடத்தில் (வஶிஷு) செய்யப்படும் தவறு (பரிப₄வ: ) நிச்சயமாக (ஹி), நன்மைக்கு வழி தராது (ந பத்₂ய:)! (15)

ஒரு காலமுந் தவ றாதது குறி யாகிய ஆசை
உணர் வூறிய சர மாயது உல காள்கிற ஒசை
நர மானுட சுர வானவ ரசு ரானவ ருலகு
எவ ராயினுங் கணை யாலடி படு வாரது இலகு
மத மாகிட அது போலுனை பொது வாமெனக் கொண்டு
மத னாருடல் அத னால்விட நினை வானது முண்டு
நித மானது தன தாமுள நிலை யானது கண்டு
நிறை வாரிட மிட ராகிட விரை வாலழி வுண்டு!
(15)

குறிப்பு:

இப்பாடலில், தவக்கோலத்தில் இருக்கும் சிவபெருமானை ஆசையெனும் அம்பினால் எழுப்ப முயன்று, தன்னை இழந்த மன்மதனைப் பற்றிய சிவபுராண நிகழ்ச்சி எடுத்துக் கொள்ளப்பட்டது. காமகலா காமேஸ்வரன் என அம்மையும் அப்பனுமாக உலகை எல்லாம் தோற்றுவித்த பரமேஸ்வரனே, இத்தோற்ற மாயையினை எல்லாம் கடந்த ஈரற்ற ஒரு அத்வைதப் பொருளாகி, சிவமாயும் இருக்கின்றார். பரபிரம்மமாகிய பரசிவ நிலைக்கும், தோற்றுவித்தல் முதலான ஐந்தொழிலுக்குக் காரணமாகிய சிவசக்தி நிலைக்கும் உள்ள தொடர்புதான் இறைவனின் "இச்சை" எனும் திருவிளையாடல் ஆகும்.

இப்பாடலில், புஷ்பதந்தர் தவம் செய்வோருக்கு இடர் செய்வது மிகத்தவறானது எனக் காட்ட "காம தகனம்" எனும் சிவபுராணக்கதையைச் சுட்டிக் காட்டியுள்ளார். இதையும் ஆராய்ந்தால், வேதாந்த உண்மைகள் அவிழ்ந்து கொட்டும்!

16

மஹீ பாதா3கா4தாத்3 வ்ரஜதி ஸஹஸா ஸம்ஶயபத3ம்
பத3ம் விஷ்ணோர்ப்4ராம்யத்3 பு4ஜ-பரிக4-ருக்3ண-க்3ரஹ- க3ணம் |
முஹுர்த்3யௌர்தௌ3ஸ்த்2யம் யாத்யனிப்4ருத-ஜடா-தாடி3த-தடா
ஜக3த்3ரக்ஷாயை த்வம் நடஸி நனு வாமைவ விபு4தா || 16 ||

## பொருள்:

(நினது) பாதங்களின் (பாத3) ஓசையால் (ஆகா4தாத்3) பூமி (மஹீ) திடீரென (ஸஹஸா) ஐயம் கொள்கிறது (வ்ரஜதி.. ஸம்ஶயபத3ம்). இரும்புக் கழியாக (பரிக4) நினது கரங்கள் (பு4ஜ) வீசப்படுவதால் (ருக்3ண), விஷ்ணுவால் அளக்கப்பட்ட மூன்று உலகங்களும் (பத3ம் விஷ்ணோர்), பல கோடி (க3ணம்) அண்டங்களும் (க்3ரஹ) சிதறிப் போகின்றன (ப்4ராம்யத்3). (நினது) அலைபாயும் (அனிப்4ருத) சடை முடிகளால் (ஜடா) தீடிரென்று (முஹுர்) அறையப்பட்ட (தாடி3த) வானத்தின் (த்3யௌஸ்), வளைந்த பக்கங்கள் (தடா:) துயரமம் உடையதாக (தௌ3ஸ்த்2யம்) ஆகின (யாத்). உலகைக் காக்கவே (ஜக3த்3 ரக்ஷாயை), தாங்கள் (த்வம்) நடனமாடுகிறீர்கள் (நடஸி). எனினும் (ஏவ), (தங்கள் நடனத்தின்) வலிமை (விபு4தா) தாங்க முடியாதது (வாமா), ஐயமில்லை (நனு)! (16)

புட மாயிடு மடி யாலெழு மிடி யோசையில் மருளும்
புரி யாமலே தடு மாறிடு நில மாமரி வுலகும்
திட மாயிரும் பென வாகிடுங் கர மாடிட மிரளும்
திசை யாவிலு விசை யாலுல கசை யாலடி பழகும்
வட மாகிய சடை யாமுடி அலை யாகிட அறையும்
வளை வாகிட வெளி யாமது வகை யாயிட ரடையும்
நட னாதுன தரு ளாலு கத னாற்சுக மெனினும்
அட டாயிது முடி யாதது அதிர் வானது நிஜமே!
(16)

குறிப்பு:

முந்தைய பாடலில் “காமதகனம்” எனத் திருக்கண் மலர்ந்து அருள்பாலித்த சிவ பெருமான், தன்னுடைய திருத்தாண்டவத்தால் எல்லா உலகங்களையும் படைத்தும், விரித்தும், அழித்தும், மறைத்தும் நிலையில்லாமல் சுற்ற வைக்கின்ற திருவிளையாடலைச் செய்கின்றார் என்பதை இப்பாடலில், புஷ்பதந்தர் காட்டுகின்றார்.

கருணையால் உலகங்களாகிய தோற்றங்கள் அனைத்தையும் தன்னுள் ஈர்த்துக் கொள்வதும், விளையாட்டாய் மீண்டும் தோற்றங்களாக உலகங்களை மாற்றித் தருவதும், அன்னாரின் திருநடனத்தாலேயே விளைகின்றன. அத்திருநடனமே எல்லா உலகங்களையும் தாங்குகின்ற தளம். அதிலேதான் யாவும் பிறக்கின்றன, வளர்கின்றன, அழிகின்றன.

வேதாந்தம், தீயொளி முனையில் உடைய கயிற்றைச் சுழற்றினால் எப்படி தீப்பொறிகளால் பலவிதமான தோற்றங்கள் வானில் தோன்றுமோ, அப்படியே, அறிவுத் தீயாக சிவபெருமான் சுழன்று ஆடுகையில், எல்லாத் தோற்றங்களும் வெளிப்படுகின்றன எனச் சொல்கிறது. அவரது அசைவினாலேயே, உலகங்கள் பிறந்தும், மறைந்தும் இருக்கின்றன. அக்கருணயே, நம்மைத் தினமும் அரவணைத்து ஆழ்துயில் எனவும், உடலை விடும்போது நீள்துயில் எனவும், மற்றொரு விழிப்புக்கும், பிறப்புக்கும் அடித்தளம் இடுகின்றது. இறைவனது திருநடனத்தைக் கவிநயத்துடன் விளக்கும் ஆசிரியர், எப்படிப் பேரிடியும் மின்னலும் நம்மை வியந்து பார்க்கத் தூண்டினாலும், நமக்குள் பயத்தைத் தருகின்றனவோ, அப்படியே, இறைவனது நடனமும் நமக்குள் ஆர்வத்தையும், அச்சத்தையும் தருகிறது எனச் சொல்கிறார்.

அசையாச் சிவம் எப்படி ஆனந்த நடனமாடும் என நாம் ஆய்ந்து நோக்கினால், நிற்பதுபோல் சுற்றும் சக்கரம்

என்பதாய், அதிர்வினுள் அசையாத நிலையாய், அசையா நிலைக்குள் அடங்காத அதிர்வாய், வியத்தகு விளக்கங்கள் எல்லாம் நமக்கு வெளிப்படும். எப்படி வானியல் ஆய்வும், நுண் அணுவியல் ஆய்வும், பார்ப்பது அலையா, நிலையா (wave or particle) என அறிவால் தீர்மானிக்க முடியாத அனுபவமாக நிற்கிறதோ, அப்படியே இறை உணர்விலும், இன்னதெனச் சொல்ல முடியாச் சுகமே கேள்விகளுக்கு விடையாக, அல்ல, கேள்விகளை அழிக்கும் விளக்காக இருக்கிறது.

இறைவனின் தாண்டவத்தைப்பற்றிய நுண்ணிய தத்துவங்களை எல்லாம் மேலும் ஆராய்வதற்கு, இப்பாடல் நமக்கு ஒரு நல்ல தூண்டுகோலாக விளங்குகிறது.

## 17

வியத்$_3$வ்யாபீ தாரா-க$_3$ண-கு$_3$ணித-பே$_2$னோத்$_3$க$_3$ம-ருசி:
ப்ரவாஹோ வாராம் ய: ப்ருஷதலகு$_4$த்$_3$ருஷ்ட: ஶிரஸி தே |
ஜக$_3$த்$_3$த்$_3$வீபாகாரம் ஜலதி$_4$வலயம் தேன க்ருதமிதி
அனேனைவோன்னேயம் த்$_4$ருதமஹிம தி$_3$வ்யம் தவ வபு: || 17 ||

**பொருள்:**

(எந்த) நதியின் (வாராம்) தொடர்ச்சியான ஓட்டம் (ப்ரவாஹா: ) வானுலகு வழியாகப் (வியத்$_3$) பரவுகின்றதோ (வ்யாபீ), *(எதனுடைய)* நுரைத்த (பே$_2$னே) அழகு (ருசி:) அடர்த்தியான (கு$_3$ணித) கோடிக்கணக்கான (க$_3$ண) விண்மீண்களாகப் (தாரா), பார்க்கப்படுகிறதோ (த்$_3$ருஷ்ட:), அது (ய:), மிகச் சிறிய (லகு$_4$) நீர்த் துளியைப் போல (ப்ருஷத), நினது (தே) தலையில் (ஶிரஸி) தோன்றுகிறது (உத்$_3$க$_3$ம). அந்த (புனித நதியால்) (தேன), கடலினால் (ஜலதி$_4$) சுற்றிலும் சூழப்பட்ட (வலயம்) தீவுகள் (த்$_3$வீப) என்பதாக (ஆகாரம்), உலகம் (ஜக$_3$த்$_3$) உருவாக்கப்பட்டது (க்ருதம்). எனவே (இதி), இதிலிருந்து (அனேன ஏவ), நினது

(தவ) புனித (திவ்யம்) வடிவம் (வபு:), மகத்துவம் உடையது (மஹிம) என்பது உறுதியாக (த்ருத) எடுத்துக் காட்டப்படுகிறது (உன்னேயம்). (17)

நெடு வானிடத் தட மாதிரைக் கட லாயிது பரவ
நிறைத் தாரகை நுரைப் பூவென இறைத் தாகிட உலவ
படு நானிலத் திட மாநதித் தட மாயது பிரிய
திடற் தீவெனக் கட லாற்சுரு வளை காப்பிட விரிய
அடர் வானது உல காவையுந் தர வாகிய கங்கை
அது வோவுன் முடி மேலொரு துளி யாகிய நங்கை
இட மாகிட சிவ மாமுன தரு ளாளுமை பெரிது
இனி தானது உன தாமுரு புனி தாகிய புகழே!
(17)

குறிப்பு:

இறைவனின் திருநடனத்தின் விளைவாகவே "பால்வெளி" என நாம் அழைக்கின்ற வானுலகத் தாரைகள் எல்லாம் விளைகின்றன. உயிர்த்திருக்கும் இந்த மின்னொளி வெள்ளமே ஆகாய கங்கை.

அந்த ஆகாய கங்கையை, உயிர்க்கு ஏதுவான நீர்வளமாய், நந்நதியாய் இப்பூமியிலே தோன்றச் செய்து, எல்லா வளங்களுக்கும் வித்திட்ட கருணையுடையவர் சிவபெருமான் என்பதை இப்பாடலில் ஆசிரியர் சுட்டிக் காட்டுகிறார்.

இப்பாடலில், ஆசிரியர் எல்லா உலகங்களையும் உயிர்ப்பிக்கும் அமிர்தமாகிய கங்கையின் பெருமையினை வியந்து, அந்த கங்கையையும் எளிதாகத் தலையில் முடிந்திருக்கும் சிவபெருமானின் புகழ், அதைவிட எத்தனை பெரிது எனப் புகழ்ந்து துதிக்கிறார்.

கங்கை என்பது "பால் வெளி" என அண்டமெல்லாம் பரவிக் கிடக்கும் அமிர்த ஓட்டம். அச்சக்தியே பூமியில் நீராக விழுந்து, நதியாகக் கடலாக எல்லா உலகங்களையும் விளைவிக்கிறது. ஆனால் அப்பெருவெள்ளமோ, இறைவனின் முடியில் ஒரு நீர்த்துளியாக முடியப் பெற்றிருக்கிறது!

இப்படி எல்லாம் இறைவனது உருவத்தையும், புகழையும் சிந்தித்துப் பணிபவர்களுக்கு வானமும், பூமியும், கடலும், காற்றும், நதியும், வனமும் என எல்லாமுமே, பரசிவனுருவில் விளங்கும் அலங்காரப் பொருட்களாகத்தானே தெரியும்!

அத்தகைய சான்றோர்களுக்கு, எதில்தான் புனிதம் இல்லை!

18

ரத$_2$: க்ஷோணீ யந்தா ஶதத்$_4$ருதிரகே$_3$ந்த்$_3$ரோ த$_4$னுரதோ$_2$
ரதா$_2$ங்கே$_3$ சந்த்$_3$ரார்கௌ ரத$_2$-சரண-பாணி: ஶர இதி |
தி$_3$த$_4$க்ஷோஸ்தே கோ(அ)யம் த்ரிபுரத்ருணமாட$_3$ம்ப$_3$ர-விதி$_4$:
விதே$_4$யை: க்ரீட$_3$ந்த்யோ ந க$_2$லு பரதந்த்ரா: ப்ரபு$_4$தி$_4$ய: || 18 ||

**பொருள்:**

"பூமியே (க்ஷோணீ) (நினது) தேர் (ரத$_2$:)! நூறு யாகங்களைச் செய்தவரே (பிரம்மனே) (ஶதத்$_4$ருதி) தேரோட்டி (யந்தா)! மலைஅரசனாகிய மேரு (அகே$_3$ந்த்$_3$ர:) (நினது) வில் (த$_4$னுஸ்)! அதுபோலவே (அதோ$_2$) சந்திர சூரியர்கள் (சந்த்$_3$ரார்கௌ), தேரின் இரு சக்கரங்கள் (ரதா$_2$ங்கே$_3$)! தேர்ச் சக்கரத்தைக் கையில் கொண்டவரே (திருமால்) (ரத$_2$-சரண-பாணி:) (நினது) அம்பு (ஶர) " - என இவ்வாறு (இதி), நீவிர் (தே) எரித்தழிக்க உறுதி கொண்டதுமே (தி$_3$த$_4$க்ஷோ:), மூன்று நகரங்களும் (த்ரிபுர) வைக்கோல் ஆகின (த்ருணம்).

(அப்படியாயின்) ஏன் (க:) இந்தப் பகட்டான (அயம் ஆட$_3$ம்ப$_3$ர) செயல் (விதி$_4$:)? (உண்மையில்) சிவனின் (ப்ரபு$_4$) அருட்செயல் (தி$_4$ய:), எவரையும், எதனையும் (பர) சார்ந்து (தந்த்ரா:) இருப்பதில்லை (ந க$_2$லு); (மாறாக, இவை சிவபெருமான்) தமது கட்டுப்பாட்டில் உள்ளதை (விதே$_4$யை:), ஈடுபடுத்திச் செய்கின்ற திருவிளையாடலே (க்ரீட$_3$ந்த்ய: ) ! (18)

நில மானது ரத மாய்மதி கதி ராயடி உருளும்
நிய மாயரு சதா மாய்மல ரய னாரது விடவும்
திட மாமலை தனு வாயிடும் சர மாயரி திகழும்
திரு மாலொரு விர லாடிடும் உரு ளாயணி திரளும்
அட வாயின படை யேன்முப் புர மாவையு மிரளும்
அழி வாயுன முடி வாமெனில் அருகாகிடு மிலையோ
எத னாகிலு முன தாகிடு மெது சார்ந்துன தருளே
எவை யாமிவை விளை யாடிட வகை யாயணி சிவனே!
(18)

## குறிப்பு:

இப்பாடல், "திரிபுர சம்ஹாரம்" எனும் சிவபுராண நிகழ்ச்சியைக் காட்டுவது. முப்புரங்களை அழிக்க, சிவபெருமான் புறப்பட்டபோது, எல்லாத் தெய்வங்களும் சிவபெருமானின் நோக்கத்திற்கு ஏதுவான துணையாக, கருவிகளாக விளங்கின என்பதைச் சுட்டிக்காட்டுகின்ற ஆசிரியர், எல்லாவற்றுக்கும் ஆதாரமான பரம்பொருளுக்கு, இப்படிக் கருவிகளும், துணையும், செயலும் வேண்டுமா என்ன, என வியக்கிறார்! இதெல்லாம் ஒரு பகட்டு என அன்பினால் கேலி செய்து, இறைவன் செயலற்றவன் என்பதையும், அவரது "விருப்பம்" (இச்சா சக்தி), எவ்விதமான செயலும்

இல்லாமலேயே, விளைவாகிடும் என்பதையும் நமக்குள் உணர்த்துகின்றார்.

செயல் இல்லாமல் பயன் விளையாது என்பது, பிறவிகள் யாவர்க்கும் உள்ள விதி. ஆனாலும், மனிதப் பிறவிகளுள், இறைவனை முற்றும் உணர்ந்தவர்களுக்கு, அதாவது தம்முள் ஆத்மனை உணர்ந்து இருப்போர்களுக்கு, செயற்கடன் இல்லை. இருப்பினும் அவர்கள் உடலோடு உலகில் வாழும்வரை, உலகை ஒட்டிய செயலைச் செய்தாலும், அச்செயலில் எவ்விதப் பற்றும் இல்லாமலே செய்து, பயனை விளைப்பர்.

இறைவனுக்கோ எவ்விதப் பற்றும் இல்லை. அவரது விழுப்பம் "உலகங்கள்" என்றால், அக்கணமே உலகங்கள் இருக்கும். அவரது விழுப்பம் "யாவற்றைம் தன்னுள் ஈர்த்தல்" என்றால், அக்கணமே தோற்ற மாயை யாவும் மறைந்து, இறைச்சக்தி மட்டுமே இருக்கும். சூரியன் நமக்கு ஒளியைத் தருகின்றார் எனச் சொல்வதால், சூரியன் ஒரு செயலைச் செய்கிறார் என்று நாம் எடுத்துக் கொள்வதில்லை. சூரியன் இருந்தால், அங்கே ஒளி இருக்கிறது. அவரது இருப்பே ஒளி. அதுபோன்றே இறைவனது விழுப்பம் இருந்தால், எல்லா விளைவுகளும் இருக்கின்றன.

தாயுமானவர் "அங்கிங்கெனாதபடி எங்கும் பிரகாசமாய், ஆனந்த பூர்த்தியாகி, அருளொடு நிறைந்த தெது, தன்னருள் வெளிக்குளே அகிலாண்ட கோடி எல்லாம் தங்கும் படிக்கு இச்சை வைத்து" எனச் சொல்கிறார். எங்கும் நிறைந்த பரசிவம், தனக்குள்ளேயே இருக்கின்ற "மாயா" எனும் பராசக்திக்குள், எல்லா உலகங்களையும் விளங்கும்படி "இச்சை" வைத்தார். அப்படி அவர் இச்சை வைப்பதற்கு யாது காரணம் என யாரால் கூற முடியும்? அதனால்தான் சான்றோர்கள், இறைவனது இச்சையினைத் திருவிளையாடல் எனச் சொல்கிறார்கள். பரசக்தியாக

இறைச்சக்தியைப் பார்க்கும்போது, அச்சக்தியின் விளையாட்டினை "லீலை" எனவும், அன்னையை அதனால் "லலிதாம்பிகை" எனவும் சான்றோர்கள் அழைக்கின்றார்கள். எனவே இறைவனுக்கு ஆயத்தங்களோ, ஆயுதங்களோ, படை பலமோ, செயற்குழுவோ எதுவும் தேவையில்லை. இக்காரணங்களால் புஷ்பதந்தர், சிவபுராணத்தில், சிவபெருமான் எல்லாத் தெய்வங்களையும் கருவியாகக் கொண்டு முப்புரங்களை அழித்தார் எனக் காட்டப்பட்டதை, அன்பினால் கேலியாக விமரிசனம் செய்கின்றார்.

மனதைக் கவரும் இந்த சிவபுராண நிகழ்ச்சியின் பெருமையையும், உட்பொருளையும் விளக்க ஒருநூல் போதாது. சுருக்கமாக முக்குணம், முக்காலம், மும்மலம், முவ்வனுபவங்கள், கால தேச நிமித்தம் முக்கட்டுப்பாடுகள் எனப் பலவிதமான தடைகள் நம்மைச் சிறைப்படுத்தும் அம்முப்புரங்களைத் தகர்த்தாலே நாம் விடுதலை அடையவும் வேறுபாடுகளை அறுத்து, ஒன்றேயான பரமாத்ம அனுபவத்தில் திளைக்கவும் முடியும். அதற்கு வழிகாட்டுபவரே நற்குரு.

குருவைத் தருவதுவும், குருவாக வருவதுமே பரசிவ அருளே!

19

ஹரிஸ்தே ஸாஹஸ்ரம் கமல ப$_3$லிமாதா$_4$ய பத$_3$யோ:
யதே$_3$கோனே தஸ்மின் நிஜமுத$_3$ஹரன்னேத்ரகமலம் |
க$_3$தோ ப$_4$க்த்யுத்$_3$ரேக: பரிணதிமஸௌ சக்ரவபுஷ:
த்ரயாணாம் ரக்ஷாயை த்ரிபுரஹர ஜாக$_3$ர்தி ஜக$_3$தாம் || 19 ||

**பொருள்:**

மூன்று நகரங்களையும் (த்ரிபுர) அழித்தவரே (ஹர)! ஆயிரம் (ஸாஹஸ்ரம்) தாமரைகளை (கமல) நினது (தே) திருவடிகளில் (பத$_3$யோ:) அர்ப்பிக்க (ப$_3$லிம்) உறுதி கொண்டவராக (ஆதா$_4$ய) திருமால் (ஹரி:), அதிலே (யத்$_3$) ஒன்று மட்டும் குறைவாகிப் போனதால் (ஏகோனே), (அதனை நிறைவு செய்ய) அதில் (தஸ்மின்), தன்னுடைய (நிஜம்) கண்ணையே தாமரையாகப் பெயர்த்து அளித்ததால் (நேத்ர கமலம் உத$_3$ஹரத்) (அவரின்) முழுமையான (உத்யுத்$_3$ரேக:) அன்பின் (ப$_4$க்தி:) விளைவே (க$_3$த: … பரிணதிம்), (நின் கருணையால் அவரின் கரத்தில்), மூன்றாகிய (த்ரயாணாம்) உலகங்களை எல்லாம் (ஜக$_3$தாம்) எப்போதும் விழிப்புடன் (ஜாக$_3$ர்தி) காத்தருளும் (ரக்ஷாயை), அந்த (அஸௌ) அழகிய (வபுஷ:) சுதர்ஸனச் சக்கரமாகியது (சக்ர)! (19)

தரத் தாமரை தளத் தாயிரந் தரத் தானடி பணியுந்  
தவத் தாலரி ஒருத் தாமரை குறைத் தானது கனியும்  
விழித் தாமரை அளித் தாரது வியப் பாகிய துணிவு  
விரித் தார்மன மினித் தேயுனை விளித் தேகிய பணிவு  
களித் தாயதி கரித் தாயவன் கரத் தேயரு ளுருளை  
கனித் தாயவர் விழிப் பாலுல களிப் பார்மூ வுலகை  
அளித் தாயது அரி மாலவ னழ காகிய கரமே  
அரு ளாற்றிய பரி மாற்றமென் அறி வாகின அரனே!  
(19)

**குறிப்பு:**

இப்பாடலில், திருமாலின் அளப்பறிய சிவபக்தி காட்டப்படுகிறது. தான் சிவபூஜை செய்யும்போது, பூஜைக்கான மலர்களில் ஒன்று குறைந்தது என அறிந்து, தனது விழியினையே மலராக அளித்தார் திருமால். அவருடைய அன்பிற்குப் பரிசாக, முவ்வுலகங்களையும்

காக்கின்ற அவரது சேவைக்கு உதவ அவருடைய கரத்தில் விளங்கும் சுதர்சனச் சக்கரம் எனப் பரசிவமே விளங்குகிறது எனச் சிவபுராணம் கூறுவது, இப்பாடலில் காட்டடப்படுகிறது.

தியாகம் என்பதே முற்றிய பக்தியின் அடையாளம். எதையும், எவ்விதப் பலனையும் எதிர்பார்க்காத நோக்கத்துடன் தருவதே தியாகம். தலையைக் கிள்ளிய இராவணன், விழியைக் கிள்ளிய திருமால் எனும் இவ்வெடுத்துக்காட்டுகள் எல்லாம், தியாகத்தை நமக்கு வலியுறுத்துவதற்கே ஆகும்.

ஒப்பற்ற தியாகம் என்பது, “நான், எனது” என்னும் நம்முடைய பற்றினையே அர்ப்பணிப்பது. அதுவே “சரணாகதி” எனப்படுவது. அதுவே மெய்யடியார் பண்பு.

அப்படித் தியாகம் செய்பவர்களை இறைவன் ஒருபோதும் கைவிடுவதில்லை என்பதை அடுத்த பாடலிலும் ஆசிரியர் காட்டுகிறார்.

20

க்ரதௌ ஸுப்தே ஜாக்$_3$ரத் த்வமஸி ப$_2$லயோகே$_3$ க்ரதுமதாம்
க்வ கர்ம ப்ரத்$_4$வஸ்தம் ப$_2$லதி புருஷாராத$_4$னம்ருதே |
அதஸ்த்வாம் ஸம்ப்ரேக்ஷ்ய க்ரதுஷு ப$_2$லதா$_3$ன-ப்ரதிபு$_4$வம்
ஶ்ருதௌ ஶ்ரத்$_3$தா$_4$ம் ப$_3$த்$_4$வா த்$_3$ருட$_4$பரிகர: கர்மஸு ஜன: || 20 ||

**பொருள்:**

செயல் முடிந்து உறங்கும்போது (தியாகம் நிறைவடையும்போது) (க்ரதௌ ஸுப்தே), செயலுக்கான (தியாகம் செய்தவருக்கு) (க்ரதுமதாம்) பலனை அளிக்க (ப$_2$லயோகே$_3$:) விழிப்புடன் (ஜாக்$_3$ரத்), நீவிர் (த்வம்) மட்டும் இருக்கிறீர்கள் (அஸி). நிறைவேறிய (ப்ரத்$_4$வஸ்தம்) கர்மச்

செயல்கள் (கர்மா), பரமாத்மாவாகிய தங்களது துதி (புருஷ: ஆராத$_4$னம்) இல்லாமல் (ருதே), எப்படிப் பலனை அளிக்கு முடியும் (க்வ ப$_2$லதி)? எனவேதான் (அதஸ்), தாங்கள் ஒருவரே (த்வாம்), முழுமையான பலனை அருளும் பெருமான் (ப$_2$லதா$_3$ன-ப்ரதிபு$_4$வம்) தாங்கள் எனும் அறிவினை உணர்ந்து (ஸம்ப்ரேக்ஷ்ய), (அதனால்) முழுமையான ஈடுபாடு (ஶ்ரத்$_3$தா$_4$ம்) கொண்டு (ப$_3$த்$_4$வா), வேதங்களில் (ஶ்ருதௌ) விதிக்கப்பட்ட நற்கருமங்களையும் (கர்மஸு), யாகமாகிய தியாகச் செயல்களையும் (க்ரதுஷு), மக்கள் (ஜன:) உறுதியாகச் (த்$_3$ருட$_4$) செய்கிறார்கள் (பரிகர:)! (20)

தன தாகிய பணி யாவையுந் தர மாகிடத் தந்து
தணி வாயவ ரணி வார்துயி லது போதிலும் வந்து
தர லாகிய பல னாவையுந் தரு வாயரு ளரனே
தகை யாலுனைத் துதி யாரெனில் பய னாவது மிலதே
அத னாலுனைப் பய னாலருள் தர வாகிய பெருமன்
அறி வாகிட குறி யாலடி பணி வாகிட மறைகள்
விதி யாலிடு வழி யாலற வினை யாலினி யனென
விரி வாயுர மதி யாலக மகிழ் வாரவ ரினிதே!
(20)

குறிப்பு:

செயலால் பயன் விளையும் என்பதே நமக்கான விதி என்றால், நம் வாழ்வில் நாம் செய்யும் செயல்களுக்கெல்லாம் பலன் எப்போதும் கிடைப்பதில்லையே! இக்கேள்விக்கு காரண-காரிய ஆய்வினை வைத்து மட்டுமே நாம் விடை பெற முடியாது. ஏனெனில் காலம் எனும் அளவுகோல், காரண காரியங்களின் தொடர்பை எப்படி வேண்டுமானாலும் மாறிட வைக்கும். அதனாலேயே, சாத்திரங்கள் நாம் செய்யும் ஒவ்வொரு செயலுக்கும் விளைவு உண்டு,

அச்செயலைப் பற்றுடன் செய்யும் எவர்க்கும் அவ்விளைவினால் ஒரு தாக்கம் உண்டு, அத்தாக்கம் துக்கமாகவோ, சுகமாகவோ இருக்கலாம், ஆனாலும் அத்தாக்கம் எந்த ஒரு காலத்திலும் விளையலாம் எனக் காட்டுகின்றது. அதனால்தான், சில நேரங்களில், செயலால் பயன் இல்லாததுபோலும், மற்ற நேரங்களில், செயல் செய்யாமலே பலன் விளைவது போலவும் நமக்குக் கிடைக்கின்றது.

அப்படியான தாக்கம் எப்பிறவியில் வேண்டுமானாலும் வரலாம் என்பதும் நமது சாத்திரங்கள் காட்டும் உண்மை. இதனை ஏற்பதன் மூலம், செயலால் பயன் என்பதும், நற்செயலால் நற்பயன் என்பதும், அதனால் பிறவிகள் தோறும் நற்செயலே நாம் செய்ய வேண்டும் என்பதும் நம்மால் எளிதில் ஏற்கத் தக்கதாக இருக்கிறது.

செயலால் பயன் விளையும் எனும் உறுதியைக் காப்பவன் இறைவன். ஏனெனில் இறைவனே "கர்ம பல தத்தா" என நம்முடைய வினைகளுக்கேற்ற பலனைத் தருகின்ற சாட்சி ஆகும். நமது செயலுக்குரிய தக்க பலனை, எப்போது கொடுக்க வேண்டுமோ அப்போது, எந்த அளவில் கொடுக்க வேண்டுமோ அந்த அளவில் கொடுப்பதுதான் இறைவனின் கருணை. அக்கருணைதான், நாம் தாங்க முடியாத துன்பத்திலோ, இன்பத்திலோ தாக்கப்படாமல் இருக்க, பிறவி தோறும் அடைய வேண்டிய இன்ப துன்பங்களை, அளந்து, நம்மால் தாங்கிக் கொள்ளும்படியான வகையில் அளிக்கின்றது. இதனை நாம் ஆழமாகச் சிந்தித்துப் புரிந்து கொள்ள வேண்டும்.

அப்படிப் புரிந்து கொண்டுவிட்டால், உலக இன்ப துன்பங்கள், மாறிக் கொண்டே இருக்கின்றன என்பதிலும் உறுதி கொண்டுவிட்டால், அதன் அடையாளமாக, வருகின்ற இன்ப துன்பங்களை எல்லாம் எவ்விதத் தாக்கமும் இல்லாமல், சமனாக ஏற்றுக் கொள்ளப் பழகிவிட்டால், அதுவே விடுதலை ஆகும். அதன் பிறகு

மாறாத சுகமாகிய பரசிவத்தையே நாம் விழைந்து, எல்லாச் செயல்களையும் இறைவனின் பொருட்டுச் செய்து விடலாம். அப்படிச் செய்வதால் நாம் நம்மையே இறைவனுக்குக் கொடுத்தவர்களாக ஆகிறோம்.

அப்படி நாம் சரணடைந்துவிட்டால், இறைவனுக்கும் நன்றிக்கடனாகத் தன்னையே நமக்குப் பயனாகக் கொடுப்பதைவிட வேறு வழியில்லை அல்லவா! அதுவல்லவோ பெரும்பயன்! எனவே நம்மையே நாம் இறைவனிடத்தில் கொடுத்தலே சரணடைதல் என்பதாகும்.

சரணடைதலை நாம் சரியாகப் புரிந்து கொள்வதில்லை. அது பலவீனத்தின் வெளிப்பாடு அல்ல, உண்மையான பலத்தின் வெளிப்பாடு. சரணடைவதால், நம்முடைய பொறுப்புக்களை யாரிடம் சரணடைகிறோமோ அவரிடமே உடமையாகக் கொடுத்து விடுகிறோம். அதனால் நம்மை நடத்திச் செல்லும் கடமை அவருக்கு இருக்கிறது! அதைவிட நமக்கு வேறு என்ன சுதந்திரம் வேண்டும்! ஆனால் நாம் அப்படி நம்மையே தியாகம் செய்ய எளிதாகத் துணிவதில்லை. ஏனென்றால், நமக்குள் இருக்கின்ற ஆணவம் நம்மைச் சரணடைய விடாது.

அவ்வாறான கேடான ஆணவத்தினால், ஒருவர் செய்கின்ற நற்செயலும், தியாகங்களும் கூடப் பயனைத் தராது போய்விடும், அவை அழிவுக்குக் காரணமாகிவிடும் என்பதை அடுத்த பாடலில் ஆசிரியர் காட்டுகின்றார்.

21

க்ரியாத$_3$க்ஷோ த$_3$க்ஷ: க்ரதுபதிரதீ$_4$ஶஸ்தனுப்$_4$ருதாம்
ருஷீணாமார்த்விஜ்யம் ஶரணத$_3$ ஸத$_3$ஸ்யா: ஸுர-க$_3$ணா: |
க்ரதுப்$_4$ரம்ஶஸ்த்வத்த: க்ரதுப$_2$ல-விதா$_4$ன-வ்யஸனின:
த்$_4$ருவம் கர்து: ஶ்ரத்$_3$தா$_4$-விது$_4$ரமபி$_4$சாராய ஹி மகா$_2$: || 21 ||

**பொருள்:**

அடியவரை ஏற்பவனே (ஶரணத3)! தியாகங்களுக்கான (க்ரது) பலனைக் (ப2ல) கொடுப்பதிலே விருப்புடையவராக (வ்யஸனின), எப்போதும் (த்4ருவம்) அருள்தர விளங்கும் (விதா4ன) நீவிர் (த்வத: ), யாகங்கள் நடத்துவதில் (க்ரியா) திறமைசாலியாய் (த3க்ஷ:) ஆளுமை கொண்டவனான (அதீ4ஶ:) தக்ஷன் (த3க்ஷ:), (தன்னையே) உடலையே (தனு), முற்றிலும் முன்னிலைப்படுத்தி (ப்4ருதாம்), யாகம் செய்பவனாக (க்ரதுபதி:) இருக்க, முனிவர்களால் அமைந்த (ருஷீணாம்) அந்தணர்களும் (ஆர்த்விஜ்யம்), தேவகணங்களால் (ஸுர-க3ணா:) அமைந்த மேலான விருந்தினர்களும் (ஸத3ஸ்யா:) (உடனிருக்க அவன்) செய்த யாகத்தை (க்ரது) அழித்தீர்கள் (ப்4ரம்ஶ). ஐயமில்லாமல் (ஹி), பிறரது புகழ்ச்சியில் மட்டும் (அபி4சாராய) ஈடுபாடு (ஶ்ரத்3தா) கொண்டு, செய்பவரின் (கர்து:) யாகங்கள் (மகா2:) ஏற்றுக் கொள்ள முடியாதனவாய் (முடிவில் துயரத்தில்) முடிகின்றன (விது4ரம்)! (21)

அற மாகிய செய லாதிலும் அரு ளாகிய நிதியே
அடி யாரிட ரடி யாலறு அதி காரியரு ளரனே
திற னானவந் தவ யாகமுந் தர லானவன் தக்ஷன்
திர ளாணவ மய மானவத் திமி ராற்புக ழுச்சன்
தவ ஞானியர் மறை ஓதவும் சுர ரானவ ருற்றும்
தன தாளுமை முத லாமெனத் தவ றாமது குற்றம்
அற வேயறுத் திட லாகினை அர னேயிது உறுதி
அய லாரிசை பெற வார்த் திட லாவையு மிடரே!
(21)

**குறிப்பு:**

“செய்யும் செயலால் பயன் விளைகிறது. மேலும் செய்யும் செயலுக்கான பயனைக் கொடுக்கின்ற கடமை

இறைவனுக்கு இருக்கிறது. அதனால், இறைவனை வழிபட வேண்டிய அவசியம் இல்லை. செயலாற்றினாலே போதும்" என வாதிட்டு, அதனால் வேதங்களை அறிந்தவர்கள் கூட, வேதங்களில் காட்டிய "கர்மகாண்டம்" எனும் பகுதியில் உள்ள நியமங்களை மட்டும் செய்வதும் இறைச்சிந்தனை இல்லாமல் இருப்பதுமாக இருந்தனர், இன்னமும் இருக்கின்றனர்.

"கர்ம பல தத்தா" எனச் செய்த செயல்களுக்குப் பலனைக் கொடுக்கின்ற சேவகனே இறைவன், எனவே அந்த இறைவனை எதற்குத் துதிக்க வேண்டும் என்ற அறிவற்ற ஆணவத்தால் அழிந்தவனுக்கு ஒரு எடுத்துக்காட்டு தக்ஷன். அவனைப்பற்றிய சிவபுராண நிகழ்ச்சியை இப்பாடல் காட்டுகிறது. இறையருளை நாடாமல் நாம் செய்கின்ற செயல்கள் எல்லாம் முழுமை அடைய முடியாது என்பதற்கு தக்ஷனின் வாழ்க்கை ஒரு எடுத்துக்காட்டாகும்.

எனவே சடங்குகளிலும் நெறிகளிலும் மட்டுமே மனதை வைத்து, அவற்றுக்கு ஆதாரமான இறைவனை அன்பினால் நாடாமல் செயலாற்றுவதால் அவை எல்லாம் புண்ணியச் செயற்களாக இருப்பினும், அவற்றால் நிறைவு கிடைக்காது. இதனை உணர்ந்து, வாழ்க்கையில் நாம் இறைவனை முன்னிலைப் படுத்தியே வாழ வேண்டும்!

இறைவனைத் துதிப்பது ஏன் இன்றியமையாதது என்றால், அப்பணிவு இல்லாதபோது, செய்கின்ற செயலும், அதனாலடையும் பயனுமே நம்மை ஆணவம் உடையவர்களாக மாற்றிவிடும். ஆணவமலம் அறிவினை மறைக்கும் என்பதும் அதனால் அழிவுவரும் என்பதும் அறியப்பட வேண்டியது அல்லவா? இறையுணர்வு இல்லை என்றால், தாம் எதற்காகச் செயலைச் செய்கிறோம் எனும் உண்மையும் மறந்துவிடும். ஆசையும், மோஹமும் ஏற்பட்டு, தமது செயலையே தவறாகச் செய்து அழிவுறும் கேடு விளையும். இதை எடுத்துக்காட்ட, பிரம்மதேவரின் செயலை அடுத்த பாடலில் ஆசிரியர் காட்டுகின்றார்.

22

ப்ரஜானாத$_2$ம் நாத$_2$ ப்ரஸப$_4$மபி$_4$கம் ஸ்வாம் து$_3$ஹிதரம்
க$_3$தம் ரோஹித்$_3$ பூ$_4$தாம் ரிரமயிஷும்ருஷ்யஸ்ய வபுஷா |
த$_4$னுஷ்பாணேர்யாதம் தி$_3$வமபி ஸபத்ராக்ருதமமும்
த்ரஸந்தம் தே(அ)த்$_3$யாபி த்யஜதி ந ம்ருக$_3$வ்யாத$_4$ரப$_4$ஸ: || 22 ||

**பொருள்:**

எல்லா ஜீவர்களுக்கும் (ப்ரஜா) காரணமாகிய (நாத$_2$ம்), (படைக்கும் பிரம்மதேவன்) தன் (ஸ்வாம்) மகளிடத்தில் (அதாவது தமது படைப்புகளின் மேல்) (து$_3$ஹிதரம்) அடைந்த (க$_3$தம்) அளவுக்கு அதிகமான (ப்ரஸப$_4$ம்) ஆசையினால் (மபி$_4$கம்), ஒரு சிவப்பு மானாக (ரோஹித்) உடலெடுத்த (பூதம்) அவளைக் கூடிக் களிக்க (ரிரமயிஷும்) ஒரு வெண்மான் (ருஷ்யஸ்ய) வடிவெடுத்தார் (வபுஷா). உடையானே (நாத$_2$)! நினது (தே) கடுங்கோபமே (ரப$_4$ஸ:) வேட வடிவமாகியது (ம்ருக$_3$வ்யாத$_4$); வில்லேந்திய கரமுடைய தாங்களால் (த$_4$னுஷ்பாணே:) தாக்கப்பட்ட (ஸபத்ராக்ருதம்) அவர் (அமும்), (தம் இருப்பிடமாகிய) வானுலகுக்கு (தி$_3$வம்) ஓடிய (யாதம்) போதிலும் (அபி) இப்பொழுதும் (அத்$_3$யாபி) விட்டொழிக்காத (ந த்யஜதி) அச்சமுடையவராகவே இருக்கிறார் (த்ரஸந்தம்)! (22)

உட லாலுருப் பட வாழ்வுற உயி ராவையும் தருவன்
உய ராசன அயனாமன மிரு ளாகிட வருவன்
நட மாடிடு செழு மானென தன தாமிள மகளை
நய மாயிது உட லூரிட வெளிர் மானென நழுவன்
அட டாயிது கொடி தானது அத னாலரன் வெகுள
அட வேடவ னென வேகணை அத னாலடி பிரள
பட லாயினன் அய னானவன் தன தாமிட மடைய
பரி தாபமே இது காலமும் பய மாமிவ ருடனே!

(22)

குறிப்பு:

இப்பாடல், படைக்கும் தெய்வமான பிரம்மதேவன் தான் படைத்த உலகத்திலேயே ஆசைப்பட்டார் என்பதையும் அதனால் சிவபெருமானால் தண்டிக்கப்பட்டுத் திருந்தினார் என்பதுமான சிவபுராணக் கதையைக் காட்டுகிறது.

தான் படைத்த ஒரு பெண்ணுருவில் பிரம்மன் மயங்கியதாயும், அத்தவற்றைத் தடுக்க சிவபெருமான் ஓர் வேடனாக வந்து பிரம்மனைத் தாக்கியதால், பிரம்மன் உண்மை தெளிந்து ஓடினார் என்பதும் கதை. உட்கரு என்னவென்றால், ஆசையின்றிச் செயல்படுவதே சரியானது. எத்தொழிலைச் செய்தாலும், விளையும் பலனில் ஆசை கொண்டு செயல்படுவது, துயரத்தையே விளைக்கும். அப்படிச் செய்வது, செயலையும், செய்பவனையும் களங்கப்படுத்தும்.

படைக்கும் பிரம்மனுக்கும் கூட, மனக் கட்டுப்பாடு இல்லையெனில், பொல்லாத ஆசை வரக்கூடும் என்றால், நமக்கெல்லாம் எத்தனை ஆழமான மன உறுதி வேண்டும்! அதனால்தான் "ஆசை அறுமின்! ஆசை அறுமின்! ஈசன் எனினும் ஆசை அறுமின்! " எனத் திருமூலர் அறிவுறுத்துகின்றார்.

ஆசையின்மை என்பது வெறுத்தல் ஆகாது. விருப்பு, வெறுப்பு என எவ்வித வேறுபாடும் இல்லாமல் எதனைச் செய்ய வேண்டுமோ அதனைச் செவ்வணே செய்து, எதனை அதன் விளைவாக ஏற்க வேண்டுமோ, அதனை அப்படியே ஏற்றுக் கொண்டு வாழுதலே உண்மையான விடுதலை ஆகும்.

ஆசை இல்லாது நம்மால் வாழமுடியும், அப்படித்தான் வாழவேண்டும் என்பதையே எல்லா சாத்திரங்களும் போதிக்கின்றன.

ஆனால் ஒரு முக்கியமான ஆசை தவிர்க்கப்பட முடியாதது. மேலும், அது நாம் விரும்பி வளர்த்துக் கொள்ளவும்

வேண்டியது. அதுதான், “தன்னீர்ப்பு”, எனத் தன்னுள்ளே விளங்கும் ஆன்மனை விழைந்து உணர்தல். ஏனெனில், உயிர்கள் எனக் கோடிக்கணக்காக விளங்கும் எல்லாமுமே, ஆத்மாவில் விளைகின்ற தோற்றமே. எப்படி அலைகள் கடலில் எழுந்து அடங்குகின்றனவோ, அப்படியே எல்லா உயிர்களும், ஆத்மாவில் அடங்கிவிடுகின்றன.

பிரிந்தவர் கூடுதல் இயற்கையல்லவா? எனவேதான் பரமாத்வில் ஆழ்கின்ற அந்த அரவணைப்பை, ஆசைப்படுவது ஒவ்வொரு உயிர்க்கும் இயற்கையாகவே உள்ளது. நாம் உலகில் அன்பை, அமைதியை, சுகத்தைத் தேடுகின்ற ஒவ்வொரு செயலும், உண்மையிலேயே நம்முடைய ஆத்மாவுள் ஆழ்ந்துவிடும் வாய்ப்பைத் தேடுகின்ற செயல்தான். இதனைக் காட்டுவதே பரசிவத்தின் முதல் விளக்கமாக வெளிப்பட்ட அன்னை பராசக்தி பரசிவனுடன் இணைந்து விடவேண்டும் எனக் காட்டும் தீவிர ஆசை. சிவசக்தி ஐக்கியம் என்பதை முக்கியப்படுத்தி, லலிதா சஹஸ்ரநாமம் முதலான தோத்திரங்களும், சாத்திரங்களும் காட்டும் உண்மையும் இதுவே. அடுத்த பாடலில் அன்னையின் ஆசையைப் புஷ்பதந்தர் காட்டுகின்றார்.

## 23

ஸ்வலாவண்யாஶம்ஸா த்$_4$ருதத$_4$னுஷமஹ்னாய த்ருணவத்
புர: ப்லுஷ்டம் த்$_3$ருஷ்ட்வா புரமத$_2$ன புஷ்பாயுத$_4$மபி |
யதி$_3$ ஸ்த்ரைணம் தே$_3$வீ யமனிரத-தே$_3$ஹார்த$_4$-க$_4$டனாத்
அவைதி த்வாமத்$_3$தா$_4$ ப$_3$த வரத$_3$ முக்$_3$தா$_4$ யுவதய: || 23 ||

**பொருள்:**

கைகளில் கணையுடன் கூடிய (த்$_4$ருதத$_4$னுஷம்) மலர்க்கரனாகிய காமதேவனால் (புஷ்பாயுத$_4$ம்) முன்பு (புர:) பார்க்கப்பட்டவளாகிய (த்$_3$ருஷ்ட்வா) பார்வதி (தே$_3$வீ), (நினைக் கண்ட) அக்கணத்திலேயே (அஹ்னாய),

காய்ந்த சருகைப்போல (த்ருணவத்) எரிக்கப்பட்டு விட்டாள் (ப்லுஷ்டம்)! இருப்பினும் (அபி) ஒருவேளை (யதி3) தன்னுடைய (ஸ்வ) அழகிலேயே (லாவண்ய) பெருமிதம் இருப்பதாலும் (ஆஶம்ஸா), வரம் தருபவரான (வரதா) (தங்களது) பாதி உடலைத் (தே3ஹார்த4) தான் அடைந்து விட்டதாலும் (க4டனாத்), தாங்கள் (த்வாம்) பெண்ணினால் ஆளப்படுவதாகவே (ஸ்த்ரைணம்) எண்ணுகின்றாள் (அவைதி)! ஓ (ப3த)! இளம் பெண்கள் எல்லாம் (யுவதய:), நிச்சயமாக (அத்3தா4) பேதமையுடையவர்கள்தான் (முக்3தா4)! (மூன்று) நகரங்களை அழித்தவரே (புர மதனா), பற்றின்மையாகிய ஒழுக்கத்தில் (யமா) ஈடுபட்டவர் (நிரதா) (அன்றோ தாங்கள்)! (23)

மல ராய்க்கர முடை யான்விடு கணை யாற்பட வுருகி
மலை யான்மக ளுனைக் காணவுஞ் சரு காயுட லருகி
வர லாயினு தன தாமதி அழ காமென உறுதி
வர தாயுட லதி பாதியுந் தர லாயின கருதி
நின தாளுமை தன தாமென மட மாகிட அடடா
நிஜ மாயிள மட மாதரின் நிலை யாமது அரனே
புற மூவையு அற வாயறு புக லேபுல னவியப்
புக ழாலருட் புனி தாதவப் பொரு ளாகிய சிவனே!
(23)

## குறிப்பு:

"மலர்க் கணைகளைக் கொண்டிருந்த மன்மதனை ஓர் வைக்கோலாக எரித்தவர் சிவன் என்பதைத் தான் முன்பே பார்த்திருந்த போதும், அன்னை பார்வதி, சிவபெருமான் தன்னுடைய அழகில் மயங்கியவர்" என்பதாகவும் இப்பாடலின் முதல் இரண்டு அடிகளில் பொருள் கொள்ளலாம். ஆயினும், பரசிவத்தின் மேலுள்ள ஆழமான பக்தியினால் சிவபெருமானை நேசிக்கும் அன்னையை,

காமனின் மலர்க்கணைகளினால் தாக்கப்பட்டு காதலில் எரிந்து கொண்டிருக்கும் பெண் எனக் கொளவதும், பாடலில் பொருளுக்கு ஏற்றதாகவே அமைகிறது. அப்படியே தமிழிலும் அமைக்கப்பட்டது. காமாக்ஷி, காமகலா காமேஸ்வரி என்றெல்லாம் துதிக்கப்படுபவள் அல்லவா அன்னை!

இப்பாடல், சிவபுராணத்தில் உள்ள பார்வதி-பரமேஸ்வர உறவினைக் காட்டுவது. புஷ்பதந்தர், பரசிவத்தை ஈரற்றதான பரப்பிரம்மமாக உணர்ந்திருக்கிறார். ஈரற்றதான அப்பிரம்மத்தையே, பரமசிவன்-பார்வதி எனும் அம்மையப்பனாக உருவகித்துப் பணிந்துமிருக்கிறார். எனினும், அவரது கவியுள்ளம் கேட்கிறது - ஆசைகளற்ற பரசிவம், பெண்ணுருவில் ஆசைப்படுமா என்ன! அழகில் ஈடற்றவளான அன்னை பார்வதி, தன் முன்னே சிவபெருமானைப் பார்த்த அக்கணமே தன்னை இழந்தவளாக ஆகிவிட்டாள். ஆனாலும், புஷ்பதந்தரின் கவி உள்ளத்துக்கு, பார்வதி எனும் அழகிய மடந்தையின் பேதமை தெரிகின்றது.

இறைவனின் அழகில் தன் வயம் இழந்த அன்னை, பரசிவனின் உடலிற் பாதியைத் தான் பெற்றுவிட்டதால், தன்னுடைய அழகே இறைவனையும் ஆளுமை கொள்கிறது என எண்ணுகிறாளாம்! புஷ்பதந்தரின் கவிநயம், அன்னையின் அன்பையும், அரனாரின் அருளையும் இப்படி விளையாட்டாய் விமரிசிக்கிறது. பரசிவமே அம்மை-அப்பன் என்றான திருவிளையாடற் தத்துவங்களையும் ஆராய்ந்துணர நம்மைத் தூண்டுகின்றது.

பரம்பொருள் “ஸத்-சித்-ஆனந்தம்” எனும் “இருந்தொளிர்சுகம்” என ஈரற்றதாய், எல்லையற்றதாய் இருப்பது எனக் காட்டும் வேதாந்தம், அப்பரம்பொருளுடைய இருப்பை உணர்த்த அதனுடைய சக்தி வெளிப்பட வேண்டும் என்பதையும், அப்படி

வெளிப்படும் பரம்பொருளின் சக்தியே, அன்னை பராசக்தி வடிவம் எனவும் காட்டுகின்றது. அதனாலேயே அன்னையை "சத்யானந்த ரூபிணி", "சித்ரூபிணி" என்றெல்லாம் சாத்திரங்கள் துதிக்கின்றன. "சித்ரூபிணி" என்றால், "சித்" ஆகிய எல்லையற்ற பரம்பொருளுக்கு, ஒரு வடிவத்தைக் கொடுப்பது எனப் பொருளாகிறது. மேலும் வடிவம் என்றாலே, அதற்கு ஓர் எல்லை இருந்தாக வேண்டும் அல்லவா? எனவே பராசக்தி பரம்பொருளின் எல்லைக்குள்ளேயே, பரம்பொருளைச் சார்ந்தே இருக்கிறாள் எனினும், பரம்பொருளையே உணரவைக்கின்ற, விளங்க வைக்கின்ற "விமர்சன ரூபிணி" யாகவும் இருக்கின்றாள்.

ஆகையால், பரம்பொருளின் சக்தி வெளிப்பாடாகிய பராசக்திக்கு முழுமையான இன்பம், தன்னை மீண்டும் பரம்பொருளுடன் ஆழ்த்திக் கொள்வதில்தானே! அதனால்தான் அன்னை எப்போதும் தவக்கோலத்தில், பரசிவத்துடன் கலந்துவிடுவதையே விரதமாக வைத்திருக்கிறாள். பரம்பொருள் ஓர் சாட்சியாக மட்டும் பார்த்திருக்க, எல்லா உலகங்களையும், உயிர்களையும் படைத்தும், வளர்த்தும், அழித்தும், மறைத்தும் அன்னையே திருவிளையாட்லை நடத்திக் கொண்டிருக்கிறாள். அந்த விளையாட்டில் நாமெல்லாம் பொம்மைகளாக இருந்தாலும், நம்முள்ளேயே அன்னையும் அப்பனுமாய் பரசிவமும், பரசக்தியும் விளங்குகின்றார்கள். தன்னைப்போலவே, எல்லா உயிர்களும் பரமாத்மனில் ஈரற்று இணையும் நல்லாசை கொள்ள வேண்டும் என்பதையே தன்னுடைய தவக்கோலத்தினால் அன்னை உபதேசித்துக் கொண்டிருக்கிறாள்.

அன்னை அப்படி எல்லாம் வியந்து மயங்கிய பரசிவனாரின் உருவத்தை புஷ்பதந்தர், தனது கவித்துவத்தினால், பார்ப்பதற்கு எளிமையாகவும், ஒரு சிலருக்கு புனிதமற்றதோ எனவும் எண்ணும்படியாக சிவபெருமானின் தோற்றம் இருக்கிறது, எனினும், அதுவல்லவோ பெரும் சுகம் தருவது எனக் காட்டுகின்றார்.

24

ஶ்மஶானேஷ்வாக்ரீடா$_3$ ஸ்மரஹர பிஶாசா: ஸஹசரா:
சிதா-ப$_4$ஸ்மாலேப: ஸ்ரக$_3$பி ந்ருகரோடீ-பரிகர: |
அமங்க$_3$ல்யம் ஶீலம் தவ ப$_4$வது நாமைவமகி$_2$லம்
தத$_2$பி ஸ்மர்த்ரூணாம் வரத$_3$ பரமம் மங்க$_3$லமஸி || 24 ||

**பொருள்:**

காமனை அழித்தவரே (ஸ்மர ஹர:)! *(நினது)* விளையாட்டு மேடை (ஆக்ரீடா$_3$) சுடுகாடு (ஶ்மஶானேஷு)! உடனிருப்போர் (ஸஹசரா:) பிசாசுகள் (பிஶாசா:)! பூசுவது (ஆலேப:) எரியுமுடற் சாம்பல் (சிதா ப$_4$ஸ்மா)! மேலும் (அபி) அணியும் மாலை (ஸ்ரக$_3$) பலவித (பரிகர:) மனிதருடைய (ந்ரு: ) மண்டை ஓடுகள் (கரோடீ)! இதனால் (ஏவாம்), எல்லாம் (அகி$_2$லம்) நினது (தவ) செயல் (ஶீலம்) "புனிதமற்றது" (அமங்க$_3$ல்யம்) என்பதாகவும் (நாம) தோன்றலாம் (ப$_4$வது)! எனினும் (தத$_2$பி), வரமளிப்பவரே (வரதா)! தங்களை நினைப்போருக்கு (ஸ்மர்த்ரூணாம்) மிக உயர்வான (பரமம்) நலமாகவே (மங்க$_3$லம்) இருக்கிறீர்கள் (அஸி)! (24)

மத னாருரு அத மாயரு வித மாயிடு மரனே
மகிழ் வாயிடு சுடு காடது விளை யாடிடு மிடமே
உட னாயுட லற வாவிக ளுற வாடிடு முடனே
உட லாவிலு சுடு சாம்பலு மிட மாடிடு வடமே
பட மானுட சிர வோடுக ளென வாகிடு மெனவே
பழி யானது வழி யாமென மொழி வாரது விடவே
வர தாயுன தரு ளாலுனை வதி வார்மன மெனிலே
வள மாவையுந் தரு வாயெனு வகை யாகிய நலமே!
(24)

குறிப்பு:

காமனை அழித்தவராக, பயங்கரமான பாம்புகளும், மண்டை ஓடுகளும், சாம்பலும் அணிந்து, இடுகாட்டிலும், சுடுகாட்டிலும் இருப்பவருமாக சிவபெருமான் இருப்பதால், அவர் தூய்மையற்ற பொருட்களை வைத்திருக்கிறாரே, புனிதமற்ற இடங்களில் எல்லாம் இருக்கின்றாரே எனச் சிலர் கருதக்கூடும். ஆனால் புஷ்பதந்தருக்கோ நினைத்தோருக்கு எல்லா நலனையும் அளிக்கின்ற கருணை வள்ளலான சிவபெருமானின் தோற்றம், மிக மிக ஏற்றமுடையதாவே இருக்கிறது ! அவரது உருவினைச் சிந்திப்பவர்களுக்கு எல்லா நலனும் அமைகிறது. எனவே மெய்யடியார்கள் எவர்க்கும், சிவபெருமானின் தோற்றம் புனிதத்திலும் புனிதமாகவே அமைகிறது ! பக்தியினால், உள்ளத்துள் ஒன்றுதற்கு எவ்வுருவம் உதவுமோ, அவ்வுருவில் எல்லாம் இறைச்சக்தியைத் துதிப்பதுதான் நமது சாத்திரங்களின் வழிகாட்டல் ஆகும்.

அதனாலேயே, பல வடிவங்களில் இறைவனைப் பணிகின்ற பண்பும், சுதந்திரமும் வேறு எந்தச் சமயத்திற்கும் இல்லாமல், நமக்குக் கிடைத்திருக்கிறது ! அது எவ்வளவு அரிய வாய்ப்பு ! உருவினால், பெயரினால் இறைவனைப் பலவாறாகப் பணிந்து பண்பட்ட மெய்யடியார்களுக்கு, முதிர்ச்சியினால் உருவற்ற இறைச்சக்தியைத் தம்முள்ளேயே ஊன்றிக் கனியும் தகுதி கிடைக்கும் என வேதாந்தம் காட்டுகிறது. இதனை நினைவுபடுத்தவே, அடுத்த பாடலல், ஆசிரியர் மெய்யடியார்களின் மெய்யன்பு முதிர்ச்சி அடையும்போது, இறைவனின் திருவுருவம் உள்ளத்துள் ஒடுங்க, திருநாமமும் உயிர் மூச்சில் ஒன்றாகி உருக, பரசிவத்தைத் தனக்குள்ளேயே, இருந்தொளிரின்பம் (ஸத்-சித்-சுகம்) என உணர்ந்து நிலைப்பார்கள் எனவும், அதனால் எல்லாப் பயனையும் அடைவார்கள் எனவும் காட்டுகின்றார்.

25

மன: ப்ரத்யக்சித்தே ஸவித4மவிதா4யாத்த-மருத:
ப்ரஹ்ருஷ்யத்3ரோமாண: ப்ரமத3-ஸலிலோத்ஸங்கி3த-த்3ருஶ: |
யதா3லோக்யாஹ்லாத3ம் ஹ்ரத3 இவ நிமஜ்யாம்ருதமயே
த3த4த்யந்தஸ்தத்த்வம் கிமபி யமினஸ்தத் கில ப4வான் || 25 ||

**பொருள்:**

வேதங்களின் நெறிப்படியே ஒழுகி (ஸவித4ம்), சீரான மூச்சினாலும் (அதாவது யோகப் பயிற்சியினாலும்) (ஆத்த-மருத:) (எண்ணங்கள் சீராகி) மனம் (மனஸ்) ஆத்மாவினுள் (ப்ரத்யக்-சித்தே) ஆழ்ந்து விடுவதால் (அவதா4ய) பேரானந்தம் (ப்ரமத) மிகக் கொண்டு, கண்கள் (த்3ருஶ:) முழுதும் (உத்ஸகி3த) கண்ணீர் மல்க (ஸலில), உடலெங்கும் மயிற்கூச்செரிய (ப்ரஹ்ருஷ்யத்3ரோமாண:), ஞானியர்கள் (யமின:), எதனால் (யதா3) உலகமறியா (ஆலோக்ய) பேரின்பத்தில் (ஆஹ்லாத3ம்) மூழ்கியவர்களாக (நிமஜ்ய), ஏதோ (இவ), அமிர்தம் நிரம்பிய (அமிர்த மயே) ஏரியில் (ஹ்ரதே) தாங்கள் அழிந்து இருப்பதாக அனுபவித்து (த3த4தி), (அவ்வனுபவத்தால்), எதனை அவ்வாறு (கிம் அபி) தம் உள்ளத்தினுள்ளேயே (அந்தர்) விளங்கும் தன்மையாக (தத்வம்) (உணர்கிறார்களோ), அந்த ஆத்ம தத்துவம் (தத்), உண்மையில் (கில) தாங்களே (ப4வான்)! (25)

மறை காட்டிய முறை யீட்டிட நிறை மூச்சிட யோகம்
மன மாற்றமுந் தெளி வேற்றவும் மறை யாத்தும ஞானம்
நிறை வூட்டிட விழி யூற்றிட மயிற் கூச்செரி வாகும்
நிஜ மாயமிர் தம மாய்நதி நிறை வாலதி லாளும்
உல காவிலு முண ராதரு நல மாகிய வளமே
உணர் வாயுள முள தாமெனு வுயர் வாகிய வரமே
எது வாமது எத னாலது எது ஆன்மனு பவமே
அது தானர மய மாகிய அரு ளாகிய சிவமே!

(25)

குறிப்பு:

பரசிவனை வேண்டி உலக இன்பங்களைப் பெற்று வாழ்பவர் பலர். ஒரு சிலரே சமய நெறிப்படி நியமங்கள் செய்தும், பக்தி, சிரத்தை இரண்டுடனும் தொழுதும், வேத சாத்திர முறைகள் தவறாமல், யோகம், தியானம் செய்தும் – இப்படிப் பல வழிகளிலும் பரசிவனை நாடித் தவமிருந்து பேரின்பம் அடைகிறார்கள்.

படிப்படியாக மனதில் தூய்மையும், மதியில் உறுதியும் அடைந்த நன்மக்களுக்கு, வேதாந்தம் இறைந்து கிடக்கும் இறைவனாகத் தேடிய "அது", நமக்குள்ளேயே கடந்து உள்ளிருக்கும் கடவுளாக இருக்கின்ற "இது" என்பதைக் கூறுகின்றது.

"அதுவா இது" என வியப்பும், மகிழ்ச்சியும், அதைப்பற்றி அறிய வேண்டும் எனத் தலையில் தீப்பற்றியவன் எப்படி அதை அணைக்க அலைவானோ, அப்படி நாம் அயராமற் தேடினால், "அது இதுவே" எனக்காட்ட, தக்க ஒரு நற்குருவை, தகுதியான அனுபவத்தை இறைவனே நமக்கு அருளுவார். அப்பேற்றினை உணரும்போது, அதுவும் இதுவும் தம்முள்ளேயே இருந்து (ஸத்) ஒளிர் (சித்) இன்பம் (சுகம்) எனும் ஆத்மனே என்பது தெளியும்.

புஷ்பதந்தர், அப்படி இருந்தொளிரின்பமாகத் தன்னுள்ளேயே உணரப்படும் ஆத்மாவே சிவம் என்பதையும், அந்த ஜீவ-ஈஸ்வர (ஜீவ-பிரம்ம) ஐக்கியத்தையும்

இப்பாடலின் மூலம் நமக்குள் தூண்டுகின்றார். அதுவே நிகமங்களும், ஆகமங்களும் காட்டுகின்ற பரம ரகசியமான பேருண்மை. அவ்வாறு உணர்ந்து கொண்டால், எல்லாச் சக்திகளும், எல்லா உலகங்களும், பார்த்தும், கேட்டும், நுகர்ந்தும், ருசித்தும், தொட்டும், நினைந்தும் அனுபவிக்கும் அத்தனையும் பரசிவமன்றி வேறு எதுவுமில்லை என்பதும் நம்முள் நிலைக்கும். அதனால், உற்சாகமாக, இறைவனை உயர்த்தித் துதிப்பதே நமது கடமை என்றாகிவிடும். இதுவே அடுத்த பாடலில் காட்டப்படுகிறது.

26

த்வமர்கஸ்த்வம் ஸோமஸ்த்வமஸி பவனஸ்த்வம் ஹுதவஹ:
த்வமாபஸ்த்வம் வ்யோம த்வமு த$_4$ரணிராத்மா த்வமிதி ச |
பரிச்சி$_2$ன்னாமேவம் த்வயி பரிணதா பி$_3$ப்$_4$ரதி கி$_3$ரம்
ந வித்$_3$மஸ்தத்தத்த்வம் வயமிஹ து யத் த்வம் ந ப$_4$வஸி || 26 ||

**பொருள்:**

"நீவிர் (த்வம்) சூரியன் (அர்க:)! நீவிர் (த்வம்) நிலவு (ஸோம:)! நீவிர் (த்வம்) காற்றாக (பவன:) இருக்கிறீர்கள் (அஸி)! நீவிர் (த்வம்) அனைத்தையும் ஜீரணிக்கும் தீ (ஹுதவஹ:)! நீவிர் (த்வம்) நீர் (ஆப:)! நீவிர் (த்வம்) அண்டவெளி (வ்யோம)! நீவிர் (த்வம்) உண்மையில் (உ) பூமி (த$_4$ரணி:)! மற்றும் (ச) நீவிர் (த்வம்) ஆத்மா (ஆத்மா) " – என (இதி) இவ்வாறு (ஏவம்), தங்களைப்பற்றி (த்வையி), தம்முள் நல்ல மாற்றத்தை அடைந்த ஞானியர் (பரிணதா:), (அவர்களின் அறிவின்) எல்லைக்குட்பட்ட (பரிச்சி$_2$ன்னாம்) சொற்களால் (கி$_3$ரம்) (தாங்கள் எதுவாக எல்லாம் இருக்கிறீர்கள் எனப்) போற்றுவர் (பி$_3$ப்$_4$ரதி)! எனினும் (து), இவ்வுலகில் (இஹ) நீவிர் (த்வம்) இல்லாத (ந ப$_4$வஸி) எதுவோ (யத்), அதன் (தத்$_3$) தன்மையை (தத்வம்) நாங்கள் (வயம்) அறிந்திருக்கவில்லை (ந வித்$_3$ம: ) (அதாவது தாங்கள் இல்லாமல் எதுவுமில்லை)! (26)

கதி ராகவும் மதி யாகவும் வளி யாகவும் நீயே
கன லாகவும் புன லாகவும் கதி யானதும் நீயே
நிதி யாகிய வெளி யாகவும் நில மாகவும் நீயே
நிஜ மாகிய உள மாடிடு நெறி யாவதும் நீயே
என யாவருந் தன தாமதி யள வாகிய எல்லை
எது வாயதில் சிவ னாரெனத் தரு வாரவர் சொல்லை
எவ ராயுல கிதி லேசிவ மில தாயெது நவில
முடி யாதது முழு தாயறிந் திட நாமறி விலரே! (26)

**குறிப்பு:**

ஆத்ம ஞானம் பெற்றவிட்ட பேரானந்தத்தால், உள்ளும் வெளியும் உள்ள எல்லாமுமே இறைவனே எனும் பரந்த நோக்கம் நமக்குள் எழுகிறது. அதனால் கதிர், மதி, காற்று, கடல் எனப் பார்க்குமிடம் எங்கும் ஒரு நீக்கமற நின்ற பொருளாக இறைவனைப் பார்க்க முடிகிறது. சான்றோர்கள் இறைவன் எவ்வெப்பொருளாக எல்லாம் இருக்கிறான் என்றெல்லாம் புகழ்கிறார்கள். ஸ்ரீ ருத்ரமும் இப்படித்தான் பரசிவனைப் பலவாகவும் வர்ணணை செய்கிறது.

புஷ்பதந்தர் கேட்பது என்னவென்றால், "எதெல்லாம் நீயாக இருக்கிறாய் என்று சான்றோர்கள் சொல்கிறார்கள். ஆனால் எதெல்லாம், நீ இல்லாதது என்பதை யாராலும் சொல்ல முடியவில்லை" என்பதே. அதாவது, எல்லாமே இறைவனே. யாதும் பரசிவம். அத்வைதம் சத்தியம் என்பதே.

அடுத்த பாடலில் திருவுருவத்தை விட்டு, “ஓம்” எனும் ஒலியினுள் இறைவனைக் காணும் அரிய உபநிடதக் கருத்துக்களை ஆசிரியர் காட்டுகின்றார்.

27

த்ரயீம் திஸ்ரோ வ்ருத்தீஸ்த்ரிபு$_4$வனமதோ$_2$ த்ரீனபி ஸுராந்
அகாராத்$_3$யைர்வர்ணைஸ்த்ரிபி$_4$ரபி$_4$த$_3$த$_4$த் தீர்ணவிக்ருதி |
துரீயம் தே தா$_4$ம த்$_4$வனிபி$_4$ரவருந்தா$_4$னமணுபி$_4$:
ஸமஸ்தம் வ்யஸ்தம் த்வாம் ஶரணத$_3$ க்$_3$ருணாத்யோமிதி பத$_3$ம் || 27 ||

**பொருள்:**

அடைக்கலம் தருபவரே (ஶரணத$_3$)! தங்களைக் (த்வம்) குறிக்கும் (க்$_3$ருணாதி) ஓம் (ஓம்) எனும் சொல் (பத$_3$ம்) சிறப்பான (வ்யஸ்தம்), அ-கார (அகார) முதலான (ஆத்$_3$யை:

) மூன்று எழுத்துக்களின் வழியாக (த்ரி வர்ணை: பி$_4$:), மூன்று வேதங்களாய் (த்ரயீம்), மூன்று உணர்வு நிலைகளாய் (திஸ்ரஸ் வ்ருத்தீ:), மூன்று உலகங்களாய் (த்ரீ புவனம்), அது போலவே (அதோ .. அபி) மூன்று தெய்வங்களாய் (த்ரீ ஸுரான்), மூன்று விதமான (தீர்ண) மாற்றங்களாய் (விக்ருதி) - இவ்வாறு (இதி) விளக்குகிறது (அபி$_4$த$_3$த$_4$த்). (அம்மூன்று வகை மாற்றங்களைக் கடந்த, அவைகளுக்கு ஆதாரமான) நிலை (துரீயம்), முழு நிறைவானதாகவும் (ஸமஸ்தம்), நினது (தே) இருப்பிடமாகவும் (தா$_4$ம), ஓங்கார ஒலியின் அதிர்விலேயே (த்$_4$வனிபி$_4$:) நுணுக்கமானதாயும் (அணுபி$_4$:) அடங்கி இருக்கிறது (அவருந்தா$_4$னம்)! (27)

அக ராமுத லுக ராமிடை மக ரானது குற்று
அணி யாகிட சிவ மோமெனும் ஒலி யாலரு ளூற்று
நிக மாகம மறை மூவென நிலை யாமென மற்ற
நில மாகிட அய னோடரி அர னாமெனக் கற்ற
பர மாகிடும் அது மூவித குண மாவன அற்று
பரி யாதர வென வாகிய துரி யாநிலை உற்ற
ஒலி ஓமதில் அதிர் வாகிடு மரு காகிய பொருளே
ஒன் றாகிட மன் றாடுவர் நன் றாகிடும் அருளே!
(27)

குறிப்பு:

இப்பாடலில் "ஓம்" எனும் பிரணவ ஒலி இறைவனைக் குறிக்கிறது என்பதையும், அதில் உள்ள "அ", "உ", "ம்" எனும் மூன்று எழுத்துக்கள் மூன்று வேதங்கள், மூன்று அனுபவ உலகங்கள் எனப் பலவாறாக விரிந்து, அவற்றின் வாயிலாக இறைவனின் வெளிப்பாட்டினையே குறிக்கின்றன எனும் உபநிடத உண்மைகளையும் ஆசிரியர் சுட்டிக் காட்டுகின்றார்.

"ஓம்" என்பதில் உள்ள மூன்று எழுத்தொலிகளில், “பிரம்மா, விஷ்ணு, உருத்திரன்” என மூன்று சக்திகளும் உணர்த்தப்படுகின்றன. ஓங்கார ஒலியின் அடக்கத்திலோ, ஓர் அடங்காத நாதம் உள்ளது. அதுவே பரம்பொருள் என்பதாக, மூன்று அனுபவ உலகங்களையும் கடந்த துரீய உணர்வாக உபநிடதங்கள் நமக்குக் காட்டுகின்றன! அப்பரம்பொருளே பரசிவம் என்பதை புஷ்பதந்தர் இப்பாடலில் காட்டியுள்ளார்.

ஓங்கார ஒலியின் உட்பொருளைப்பற்றி உபநிடதங்கள் தருவதையும், கருணையால் சான்றோர்கள் அவற்றுக்குத் தந்த அரிய விளக்கங்களையும் மேலும் ஆய்வதற்கு புஷ்பதந்தரின் இப்பாடல் நம்மை மேலும் தூண்டுவதாக உள்ளது!

28

ப$_4$வ: ஶர்வோ ருத்$_3$ர: பஶுபதிரதோ$_2$க்$_3$ர: ஸஹமஹான்
ததா$_2$ பீ$_4$மேஶானாவிதி யத$_3$பி$_4$தா$_4$னாஷ்டகமித$_3$ம் |
அமுஷ்மின் ப்ரத்யேகம் ப்ரவிசரதி தே$_3$வ ஶ்ருதிரபி
ப்ரியாயாஸ்மைதா$_4$ம்னே ப்ரணிஹித-
நமஸ்யோ(அ)ஸ்மி ப$_4$வதே || 28 ||

**பொருள்:**

இறைவா (தே$_3$வ)! "பவன் (ப$_4$வ:), ஸர்வன் (ஶர்வ: ), உருத்திரன் (ருத்$_3$ர:), பசுபதி (பஶுபதி: ); மேலும் (அத) உக்கிரன் (உக்$_3$ர: ) அத்துடன் (ஸஹ) மஹாதேவன் (மஹான்); மற்றும் (ததா$_2$) பீமன் (பீ$_4$ம: ) ஈசன் (ஈஶான:)" - என (இதி), இந்த (இத$_3$ம்) எட்டு வகை (அஷ்டகம்) திருநாமங்கள் (தங்களுக்கு) (அபி$_4$தா$_4$னா). அந்த (யத்$_3$) வேதங்களும் (ஶ்ருதிரபி) அப்பெயர்களில் (அமுஷ்மின்) ஒவ்வொன்றையும் (ப்ரத்யேகம்) சுற்றி வளைத்து விளக்குமெனில் (ப்ரவிசரதி) அத்தகைய (அஸ்மை) உயரிய (துரீய) நிலையிலுள்ளவரும் (தா$_4$ம்னே),

அன்புக்குரியவருமான (ப்ரியாய) தங்களை (ப$_4$வதே), யான் பணிவுடன் வணங்கி இருக்கிறேன் (ப்ரணிஹித-நமஸ்யோ அஸ்மி)! (28)

பவ னாயுருத் திர னாய்ப்பசு பதி யாய்மிகு ஸர்வன்
உட னாயுக் கிர னாயுரு பல வீமனு மீசன்
என வாயுனை யிறை வாமறை எட் டாகிய நாமம்
எத னாகிலு முழு தாயுனை எட் டாதன வாகும்
நின தாமிசை பெரி தாமுன தொரு நாமமு மினிது
நிறை வாமதை முழு தாய்மறை நிறு வாதது அரிது
பர மாயருட் சிவ மாயுயர் பத மாகிய அன்பே!
பணி வாலடி பணி வேனருட்ப் பரி வாகிய பொருளே!
(28)

குறிப்பு:

பல உருவங்களாக இறைவனை நினைந்து துதித்த மனம், உருவற்ற பரம்பொருளைத் தியானிக்கும் முதிர்ச்சியினைப் பெற்றாலும், எண்ணற்ற திருநாமங்களால், இறைவனைப் புகழ்வதில் இன்புறுகிறது. இறைவனின் திருவடிவங்களைப் போலவே, திருநாமங்களையும் நம்மால் முற்றிலும் புரிந்து கொள்ள முடிவதில்லை. வேதங்கள் எட்டு விதமான திருநாமங்களைத் தந்தாலும், அவற்றின் முழுமையான பொருளை நம்மால் முற்றும் உணர முடியவில்லை.

புஷ்பதந்தர், ஓம் எனும் ஒலியினுள் உறைந்து இருக்கும் ஆதாரமானதும், துரீயம் என விழிப்பு, கனவு, துயில் இவற்றை எல்லாம் கடந்து அவற்றுக்கு சாட்சியானதுமான “ஆத்மா”விலேயே தன்னை ஈர்த்திக் கொள்ள விழைகிறார். அதனால், வேதங்கள் கூறும் பெயர்களை முழுமையாகப் புரிந்து கொள்ள வேண்டும் என்பதும் தேவையில்லாமல் போகிறது.

இறைவனை அவர் படைத்த உலகங்களைப் புரிந்து கொண்டோ, அவரது திருவடிவங்களைப் புரிந்து கொண்டோ, அவரது திருநாமங்களைப் புரிந்து கொண்டோ எவ்வழியாலும் நம்மால் முழுமையாகப் புகழ முடிவதில்லை.

அதனால் என்ன! அன்பு இருந்தால் போதுமே, திருநாமங்களும், திருமந்திரங்களும், தோத்திரங்களும் நம்மால் முற்றிலும் பொருள் கொள்ளப்பட முடியாததாக இருந்தாலும், அவற்றை பக்தி, சிரத்தை எனும் இரண்டு கயிற்றினால் கட்டி நாம் கைக்கொண்டால்போதுமே! அவை நம்முடைய துதிக்கு உறுதுணை ஆகிவிடுமே! எனவே பக்தி எனும் அன்பும், சிரத்தை எனும் ஈடுபாடும் கொண்டு, பணிவு எனும் பாதையில் பயணிப்போம் என்பதே அடுத்த பாடலின் கரு.

29

நமோ நேதி$_3$ஷ்டா$_2$ய ப்ரியத$_3$வ த$_3$விஷ்டா$_2$ய ச நம:
நம: க்ஷோதி$_3$ஷ்டா$_2$ய ஸ்மரஹர மஹிஷ்டா$_2$ய ச நம: |
நமோ வர்ஷிஷ்டா$_2$ய த்ரினயன யவிஷ்டா$_2$ய ச நம:
நம: ஸர்வஸ்மை தே ததி$_3$த$_3$மதிஸர்வாய ச நம: || 29 ||

**பொருள்:**

(அறிவுத்) தீயில் இனியோனே (ப்ரியத$_3$வ)! மிக அருகில் உள்ள பொருளாகியவருக்கு (நேதி$_3$ஷ்டா$_2$ய) வணக்கம் (நம:)! மற்றும் (ச) மிகத் தொலைவில் உள்ள பொருளாகியவருக்கு (த$_3$விஷ்டா$_2$ய) வணக்கம் (நம:)! காமனை அழித்தவரே (ஸ்மரஹர)! மிக நுண்ணிய பொருளாகியவருக்கு (க்ஷோதி$_3$ஷ்டா$_2$ய) வணக்கம் (நம:)! மற்றும் (ச) மிகப் பெரிய பொருளாகியவருக்கு (மஹிஷ்டா$_2$ய) வணக்கம் (நம:)! முக்கண்ணரே (த்ரினயன)! மிகத் தொன்மையான பொருளாகியவருக்கு

(வர்ஷிஷ்டா₂ய) வணக்கம் (நம:)! மற்றும் (ச) மிக நூதனமான பொருளாகியவருக்கு (யவிஷ்டா₂ய) வணக்கம் (நம:)! எல்லாவற்றிலும் இருக்கும் பொருளாகியவருக்கு (ஸர்வஸ்மை) வணக்கம் (நம:)! மற்றும் (ச) "அது இது" என (தத்₃ இத₃ம் அதி) எல்லாமுமான பொருளாகிய (ஸர்வாய) தங்களுக்கு (தே) வணக்கம் (நம: )! (29)

அரு காமையி லரு வாகிய சிவ மாமதி யணியே
அணு காதரு தொலை வாகிய பர மேயுனைப் பணிவேன்!
உரு வாயணு நுணு வாகிய மத னாரழி அரனே
உல காவிலும் பெரி தாகிய பொரு ளேவுனைப் பணிவேன்!
முதி தாயதில் முதிர் வாகிய முத லேமுவ் விழியே
முகி ழாப்புது புதி தாகிய பொலி வேயுனைப் பணிவேன்!
எதி லாகியு முள னேயதி சய மாகிய கனியே!
இது வாமது எதி லாஞ்சிவ மய மேயடி பணிவேன்!
(29)

**குறிப்பு:**

திருவடிவங்களாகவும், திருநாமங்களாகவும் இறைவனைத் துதித்த ஆசிரியர், இப்பாடலில் இறைவனைக் காலம், தேசம் எனும் காரணங்களால் துதிக்கிறார். அருகில், தொலைவில், சிறிதில், பெரிதில், பழையதில், புதிதில் – என ஒன்றுக்கொன்று வேறுபட்டிருந்தாலும், உண்மையில் மாறுபட்டிராத சத்தியமாகவே பரசிவம் விளங்குகின்றது. 'அது' 'இது' என எதுவுமாகி என இப்பாடல் முடிந்திருப்பதும், 'அத்வைதம் சிவம்' எனும் மறைபொருள் உண்மையைக் காட்டுவதாக இருக்கிறது. இனி அறிவால் ஆய்வதற்கு ஒன்றுமில்லை, அறிவின் முடிவாக இருப்பதை அறிய முடியாது என்று ஆகி விட்டது! எனவே அன்பால் போற்றுவோம். அன்பினால் இறைவனை எப்படிப் போற்றினாலும் தகுமே! நம் போற்றலில் சொற்பிழையோ,

பொருட்பிழையோ இலக்கண ஒழுக்கில் தவறோ எவ்வாறாகினும் அதனால் ஒரு குறையுமில்லை! அன்பும் ஈடுபாடும், ஆணவமற்ற பணிவும் நம்மைச் சீர்மையால் தூக்கி, சிவனடியில் சேர்க்கும். இவ்வாறான முடிவினைத் தரவே, இப்பாடல் அமைந்துள்ளதாகத் தோன்றுகின்றது. அத்தகைய அறிவார்ந்த அன்பினால் நாம் துதிக்கும்போது, இதுநாள் வரை வணங்கி வந்த, அல்லது அறிந்து வந்த மற்ற எல்லா இறையுருவங்களும், திருநாமங்களும், நம்முடைய பரசிவச் சிந்தனையிலேயே பழுத்துப் பயன்தரும் என்பதை அடுத்த பாடல் காட்டுகின்றது.

30

ப₃ஹுல-ரஜஸே விஶ்வோத்பத்தெள ப₄வாய நமோ நம:
ப்ரப₃ல-தமஸே தத் ஸம்ஹாரே ஹராய நமோ நம: |
ஜன-ஸுக₂க்ருதே ஸத்த்வோத்₃ரிக்தெள ம்ருடா₃ய நமோ நம:
ப்ரமஹஸி பதே₃ நிஸ்த்ரைகு₃ண்யே ஶிவாய நமோ நம: || 30 ||

**பொருள்:**

நிலையானவனே (ப₄வாய)! ரஜஸ் எனும் செயற்குண ஆளுமை கொண்டு (ப₃ஹுல-ரஜஸே) உலகங்களை ஆக்கும் பிரம்ம தேவனாகிய தங்களுக்கு (விஶ்வோத்பத்தெள) மீண்டும் மீண்டும் பணிவு (நமோ நம:)! தமஸ் எனும் துயிற்குணம் மிகையாய்க் கொண்டு (ப்ரப₃ல-தமஸே) அவற்றை (உலகங்களை) எல்லாம் (தத்) அழிக்கும் (ஸமாரே) உருத்திரனுக்கு (ஹராய) மீண்டும் மீண்டும் பணிவு (நமோ நம:)! மக்களின் இன்பத்திற்காக (ஜன-ஸுக₂க்ருதே), கருணையுடன் கூடிய (ம்ருடா₃ய) சத்வம் எனும் அருட்குணம் மிகையாய்க் கொண்ட திருமாலாகிய தங்களுக்கு (ஸத்த்வோத்₃ரிக்தெள) மீண்டும் மீண்டும் பணிவு (நமோ நம:)! முக்குணங்களையும் கடந்த (நிஸ்த்ரைகு₃ண்யே) துரீய நிலையாக (பதே₃) ஒளிரும்

(ப்ரமஹஸி) மங்களமான சிவத்திற்கு (ஶிவாய) மீண்டும் மீண்டும் பணிவு (நமோ நம: )! (30)

அலை யாளுமை செய லாலுல கவை யாமருள் மணியே
அய னேயய னுரு வாமுனை அடி யேனடி பணிவேன்
அலை யாதவிழ்த் துயி லாலுல கவை யாவையி னழிவே
அர னேயர னுரு வாமுனை அடி யேனடி பணிவேன்
அதி ராதருட் குண மாயுல கவை யாவையும் நிலவ
அரி யேயரி உரு வாமுனை அடி யேனடி பணிவேன்
நிலை யாதமுக் குணந் தாண்டிய நிறை யாகிய ஒளியே
சிவ மேசிவ னுரு வாமுனை அடி யேனடி பணிவேன்!
(30)

**குறிப்பு:**

பிரம்மா, விஷ்ணு, உருத்திரன் என மூன்று வடிவாக இருப்பவரும், இவர்களுக்கு ஆதாரமான பரமேஸ்வரனாக இருப்பவருமான அந்த பரசிவத்துக்கு வணக்கம் என இப்பாடல், உருவ (சகுண), அருவ (நிர்குண) இரண்டிற்குமான எல்லாத் துதிகளும் பரம்பொருளையே சாரும் எனக் காட்டுகிறது.

புராணங்கள் இறைவனைப் பலவகையாகவும் உருவகப்படுத்தி நமக்கு வேதாந்தப் பொருளை விளக்குகின்றன. அத்வைதம் எனும் பேருண்மைக்கு நம்மைப் படிப்படியாக ஏற்றிவைப்பதற்கே, சாத்திரங்களும், புராணங்களும் பல நெறிகளின் மூலமும், கதைகளின் மூலமும் உதவி செய்கின்றன.

ஓர் நாட்டை ஆள்கின்ற மன்னனுக்கு, அம்மன்னனின் பிரதிநிதிகளாகப் பல அதிகாரிகளும் இருப்பது அவசியம் அல்லவா? ஒவ்வொரு துறையினை நிர்வகிப்பதற்கும் ஓர் மந்திரியும், அவருக்குக் கீழே பல அதிகாரிகளுமாக

இருப்பதும் நாம் ஏற்கத்தக்கது தானே! அவ்வகையிலேயே, உலகங்களை எல்லாம் ஆள்கின்ற பரமாத்மா, தன்னையே ஆளுமைக்கான துறைகள் ஒவ்வொன்றினையும் நடத்துகின்ற அதிகாரியாகவும் மாற்றிக் கொள்கிறது.

படைத்தல், காத்தல், அழித்தல் எனும் முத்தொழிலை வைத்துப் பார்க்கையில், படைப்பதற்கு செயலாற்றுவதில் ஊக்கம் இருக்க வேண்டும் என்பதால், அத்தகைய ‘ரஜஸ்’ குணவெளிப்பாடு மிகையாகக் கொண்ட பிரம்மதேவராகவும், படைத்தவற்றை எல்லாம் பரிவோடு காப்பதற்கு எல்லாவற்றையும் சமனாகப் பார்த்துக் காக்கும் ‘ஸாத்வீகம்’ மிகையாகக் கொண்ட திருமாலாகவும், படைத்தன யாவற்றையும் மீண்டும் தம்முள்ளே ஈர்த்துக் கொண்டு ஓய்வு பெற்றாலே மற்றுமொரு படைத்தல் உருவாக முடியும் என்பதனால், ஈர்த்து உறங்கும் ‘தமஸ்’ குண வெளிப்பாடு மிகையாகக் கொண்ட உருத்திரனாகவும், அப்பரம்பொருளே அமைகின்றது.

மும்மூர்த்திகளாகிய இவர்களே விழிப்பு, கனவு, உறக்கம் எனும் உயிர்களின் அனுபவங்களுக்கு அதிகாரிகளாகவும் இருக்கின்றனர். ஆனால், இவர்களும், எப்பொழுதும் மாறாமல் இருக்கும் பரசிவமாகிய பரமாத்மாவிலேயே அடங்கி இருக்கிறார்கள். இவ்வாறு எல்லா மாற்றங்களுக்கும் சாட்சியாக விளங்கும், பரசிவத்தை எப்படி நம்மால் முற்றும் அறிந்து புகழ முடியும் என்ற தமது முதற் கேள்வியையே மீண்டும் அடுத்த பாடலில் ஆசிரியர் கேட்கிறார்.

## 31

க்ருஶ-பரிணதி-சேத: க்லேஶவஶ்யம் க்வ சேத$_3$ம்
க்வ ச தவ கு$_3$ண-ஸீமோல்லங்கி$_4$னீ ஶஶ்வத்$_3$ருத்$_3$தி$_4$: |
இதி சகிதமமந்தீ$_3$க்ருத்ய மாம் ப$_4$க்திராதா$_4$த்$_3$
வரத$_3$ சரணயோஸ்தே வாக்ய-புஷ்போபஹாரம் || 31 ||

### பொருள்:

வரங்கள் தருபவரே (வரத₃)! என்னே (க்வ) (என்னுடைய) இந்த (இதம்) மனம் (சேத₃ம்) குறையுடையதாக (க்ருஶ) அமைந்து (பரிணதி) துயரங்களால் (க்லேஶ) ஆளப்பட்டிருக்கிறது (வஶ்யம்)! மாறாக (ச), என்னே (க்வ) நினது (தவ) வளமை (ருத்₃தி₄:), நிலையானதாக (ஶஶ்வத்₃), குணங்களால் (குண) வரையறுக்கப்பட்ட எல்லைகளைக் (ஸீமா) கடந்ததாக (உல்லங்கி₄னீ) இருக்கிறது! இதனால் (இதி) அளவு கடந்த அச்சம் (அமந்தீ₃க்ருத்ய) (என்) உடனிருந்தாலும் (சகிதம்), எனது (மாம்) பக்தியே (ப₄க்தி), (இப்படிச்) சொற்களாலான (வாக்ய) சேவைப் பூக்களை (புஷ்ப உபஹாரம்), நினது (தே) திருவடிகளில் (சரணயோ: ) விளைவிக்கிறது (ஆதா₄த்₃)! (31)

அட வாமன முட மாயறி விட ராகிட அயரும்
அத னாலென துள மாதிலு மக லாதது துயரம்!
அட டாவுன தரு ளோநிலை அக லாதருள் நிதியம்
அள வாலள முடி யாக்குண மறி யாதுரி யதிதம்!
என வானது அத னாற்பய மிக வாகிட அருகும்!
என வாயினு மென தாழ்மன முன தாமது இளகும்!
அத னாலடி பணி வாய்மலர் மொழி யாலணி ஆரம்
அடி யேன்நின தடி யேதர வர மேயரு ளாகும்!
(31)

### குறிப்பு:

பரசிவனை முழுமையாகப் புகழ இயலாது என்ற பணிவுடன் தொடங்கி முப்பது பாடல்களைச் சமர்பித்த புஷ்பதந்தர், இப்பாடலில் மீண்டும் தன் இயலாமையைத் தெரிவிக்கிறார். இறைவனது புகழோ வளர்ந்து கொண்டே இருக்கிறது. அவரைப் புகழ முயற்சிக்கும் நம்முடைய மனமோ துயரமுற்றதாயும், மிகத் தாழ்வான திறமுடையதாகவும் இருக்கிறது. எப்படி முயன்றாலும்,

இறைவனை முழுமையாகப் புகழுதல் என்பது முடியாத செயல். எனவே அன்பினால் மலர்ந்த சொற்களால் படைக்கப்பட்ட இத்துதி, இறைவனது திருவடிகளை பூஜிக்கும் மலர்களாக இருக்கட்டும் எனப் பணிவினால் புஷ்பதந்தர் படைக்கின்றார்.

புஷ்பதந்தர் துயரங்களால் பாதிக்கப்பட்ட மனம் என்பதற்கு "க்லேஶம்" என்பதே காரணம் எனக் கூறுகின்றார்.

பதஞ்சலி முனிவர், யோகசூத்திரத்தில் "பஞ்ச க்லேஶம்" என துயரத்துக்கான ஐந்து முக்கியக் காரணங்களைக் காட்டுகின்றார். அவை "அவித்யா, அஸ்மிதா, ராகம், த்வேஷம், அபிநிவேஷம்" என்பன. அவற்றுள் முதலில் இருப்பது "அவித்யா" எனும் அறியாமை. இதுவே எல்லாத்துயரங்களையும் விளைக்விக்கின்ற விளைநிலம். இதுவே "மாயாமலம்" என மும்மலங்களில் ஒன்றாகச் சொல்லப்படுவது. "நான் யார்" என்பதைத் தவறாகப் புரிந்து கொள்வதுதான் அறியாமை.

அதன் விளைவாக எழுவதுதான் "அஸ்மிதா" எனும் இரண்டாவது காரணம். அழியாத ஆத்மாவே நாம் என்பதை உணராமல், அழிகின்ற உடலையும் மனதையும் முதன்மைப் படுத்தி நம்மைச் செருக்கடைய வைக்கின்ற குறையாகிய இதுவே "ஆணவமலம்" எனப்படுவது.

அறியாமையும், ஆணவமும் ஏற்பட்டு, நாம் ஆத்மா என்பதை உணராமற் போவதால், நமக்குள் "ராகம்" எனும் "விருப்பம்" மற்றும் "த்வேஷம்" எனும் "வெறுப்பு" இவற்றுடன் "அபிநிவேஷம்" எனும் "அச்சம்" ஆகிய மூன்றும் விளைகின்றன. விருப்பு, வெறுப்பு, அச்சம் எனும் இம்மூன்றுடன் நாம் செய்யும் எல்லாச் செயல்களும் நம்மைத் துயரத்தில் ஆழ்த்துகின்றன. அப்படிப் பற்றுடனும், வெறுப்புடனும், பயத்துடனும் நாம் செய்யும் செயல்களின் விளைவுகளை நாம் சுமந்து அனுபவிக்க வேண்டியிருக்கிறது. இதுவே "கன்ம மலம்" எனப்படுவது.

இப்படி ஐந்துவிதக் காரணங்களால் அவதிப்பட்ட மனதில் தெளிவோ அமைதியோ இருப்பதில்லை. அதனால்

இறைவனை முழுமையாக உணர்வதற்கான தகுதியும் கிடைப்பதில்லை. இத்துயரங்களுக்கான காரணங்களை வேரோடு அறுத்து அழிக்க வேண்டுமாயின், இறைவனின் அருளே நமக்குத் துணையாக வேண்டும்! அதற்கு என்ன செய்வது?

நமது குறைகளை முந்நிலைப் படுத்தாமல், இறைவனை முற்றுமாகச் சரணடைந்து, அவரின் புகழை நம் அறிவின் முதிர்ச்சிக்கேற்பத் துதிப்பது மட்டுமே நமக்கான நல்வழியாகும். எனினும் இறைவனது புகழை முழுமையாகச் சொல்ல முடியாது என நாம் அறிந்த காரணத்தினால், அவ்வுண்மையை முற்றிலும் உணர்ந்தவர்களுக்கு இறைச்சக்தியை உணரவும், உணர்த்தவும் மௌனமே உன்னத வழியாகிறது. மற்ற வழிகள் எல்லாம் முடிவு பெறாதன என்பதைக் காட்ட ஓர் அழகான உவமையை ஆசிரியர் தமது அடுத்த பாடலில் அளிக்கின்றார்.

32

அஸித-கி$_3$ரி-ஸமம் ஸ்யாத் கஜ்ஜலம் ஸிந்து$_4$-பாத்ரே
ஸுர-தருவர-ஶாகா$_2$ லேக$_2$னீ பத்ரமுர்வீ |
லிக$_2$தி யதி$_3$ க்$_3$ருஹீத்வா ஶாரதா$_3$ ஸர்வகாலம் தத$_3$பி
தவ கு$_3$ணானாமீஶ பாரம் ந யாதி || 32 ||

**பொருள்:**

இறைவா (ஈஶ)! எழுதுகின்ற மை (கஜ்ஜலம்) கருமலைகளுக்கு (அஸித-கி$_3$ரி) உவமை எனக் கொண்டால் (ஸமம் ஸயாத்), கடலே (ஸிந்து$_4$-பாத்ரே) எழுதுகின்ற மையினைச் சுமந்திருக்கும் கலயம் (பாத்ரே)! தேவர்களின் (ஸுர) மிகச் சிறந்த (வர) மரத்தின் (தரு) கிளையே (ஶாகா$_2$), எழுதுகோல் (லேக$_2$னீ)! பூமியே (ஊர்வீ) எழுதுவதற்கான ஏடு (பத்ரம்)! ஒருவேளை (யதி$_3$) இவற்றை எல்லாம் கைக்கொண்டு (க்$_3$ருஹீத்வா), சாரதா எனும்

கலைவாணியே (ஶாரதா$_3$), முடிவில்லாமல் எல்லாக் காலமும் (ஸர்வகாலம்) நினது (தவ) நற்பெருமைகளை எல்லாம் (கு$_3$ணானாம்) எழுதுகின்றாள் (லிக$_2$தி) என்று வைத்துக் கொண்டாலும் (அபி), அப்பெருமுயற்சி (தத்$_3$) முழுமை (பாரம்) அடைய முடியாது (ந யாதி)! (32)

கரு மாமலை உரு வாமவை கரி யாம்மசி எனவே
கட லானது குட மாகிய கல மாழமு முறவே
சுர வானவ மர மாகிளை கர மாகிய கலனே
சுட ராகிய நில மாவையுந் தள மாகிய வளனே
கலை வாணியு மிவை யாவையுங் கர மாகிட எழுத
கலை யாதவ நிலை யாற்பல யுக மாயினுந் தொடர
சிவ னார்புக ழத னாற்பிடி பட லாவது அரிதே
சிவ மாகிய பர மேஸ்வர னரு ளாமது விரிதே!
(32)

குறிப்பு:

தன்னால் முற்றிலும் இறைவனது பெருமைகளை எழுத முடியாது என்பதற்கு மேலும் உறுதியூட்ட, கலைவாணியே இந்த உலகங்களை எல்லாம் தனது கருவிகளாகக் கொண்டு காலம் காலமாய் எழுதி வந்தாலும், பரசிவனின் பெருமைகளை முழுதுமாக எழுதி முடிக்க முடியாமற் போகும் என இப்பாடலில் புஷ்பதந்தர் காட்டுகிறார்! இதை உணர்ந்தோர்க்கு, இறைவனைப் புகழ மௌனமே மொழியாகின்றது.

“மௌனம்” என்றால் பேசாமல் இருப்பது, வார்த்தைகளற்ற நிலை என நாம் கொள்கின்றோம். யோக சாத்திரமும் ‘காஷ்ட மௌனம்’, ‘ஆகார மௌனம்’ என்றெல்லாம். வாக்கில் தவமிருக்கும் வழிகளை எல்லாம் காட்டுகின்றது. பேச்சைக் குறைப்பதும், பேசாமல் இருப்பதும், பேசினால் அதிலே உண்மை மட்டுமே இருக்கும்படிப் பேசுதலும்,

தவமே ஆகும். ஆனால் வேதாந்தம் ‘மௌனம்’ என்பதை ‘முனியோர் மொழி’ என்பதாகவே பொருள் சொல்கிறது.

அதாவது, இறையுணர்வால் முதிர்ந்த ஞானியர்கள் நற்குருவாக இருக்கும்போது, அன்னாரின் வாக்கு, செயல் எல்லாமுமே மௌனம் எனப்படும். ஞானியரின் பேச்சும் மௌனமே. அத்தகைய நல்லாசிரியரிடத்தில் பணிந்திருக்கும் நல்மாணாக்கர்களும் எப்போது முற்றிலும் பக்குவப்பட்டு இருக்கிறார்களோ, அப்போது அவ்விடத்தில் மொழி, செயல் எல்லாமும் அடங்கி பூரண மௌனமே நிலவும். இதையே ஆதி குருவான தக்ஷிணாமூர்த்தியும் அவரடியார் வடிவங்களும் நமக்குக் காட்டுகின்றன. சதாசிவ பிரம்மேந்திரர், பகவான் ரமணமஹரிஷி ஆகிய ஞானிகளும் மௌனத்தை அவ்வாறே நமக்கு விளக்கிக் காட்டியுள்ளார்கள். எனவே புகழ்ந்து துதித்த இறைவனைப் பூரணமாய் மனதில் நினைந்து, எண்ணம், மொழி, செயல் எல்லாம் இறைவனாய் இருத்தும் மௌனத்தை நாமும் விழைவோமே!

இனிவரும் பாடல்கள் நூற்பயனாக, இவற்றைப் பயில்வதாலும், கேட்பதாலும், நாள்தோறும் முறையாக துதிப்பதாலும், அடையும் நற்பயனைக் காட்டுகின்றன.

33

அஸுர-ஸுர-முனீந்த்$_3$ரைரர்சிதஸ்யேந்து$_3$-மௌலே:
க்$_3$ரதி$_2$த-கு$_3$ணமஹிம்னோ நிர்கு$_3$ணஸ்யேஶ்வரஸ்ய |
ஸகல-க$_3$ண-வரிஷ்ட$_2$: புஷ்பத$_3$ந்தாபி$_4$தா$_4$ன:
ருசிரமலகு$_4$வ்ருத்தை: ஸ்தோத்ரமேதச்சகார || 33 ||

**பொருள்:**

சிவனடியார்கள் (ஸகல-க$_3$ண-வரிஷ்ட$_2$:) அனைவரிலும் (ஸகல) மேன்மையான (வரிஷ்ட$_2$:) புஷ்பதந்தர்

(புஷ்பத3ந்த) இயற்றித் (சகார) தொகுத்த (அபி4தா4ன:) இந்தச் (ஏதத்) சுவையான (ருசிரம்) துதி (ஸ்தோத்ரம்), கடினமான (அருமையான) (அலகு4 ) நடையுடையதாக (வ்ருத்தை:), தேவேந்திரன் (இந்த்3ரைர:), முனிவர்கள் (முனீ), தேவர்கள் (ஸுர), அசுரர்கள் (அஸுர), எல்லோராலும் துதிக்கப்படுகிற (அர்ச்சிதஸ்ய), எல்லாக் குணங்களையும் கடந்தவராகிய (நிர்கு3ணஸ்ய), பிறைசூடிய (இந்து3 மௌளலே), இறைவனுடய (ஈஶ்வரஸ்ய) பெருமைகளை (மஹிம்ன:), சிறப்புக் குணங்களால் (கு3ண) தொடுத்த மாலையாய் படைக்கிறது (க்3ரதி2த)! (33)

வானவர்கோ முனியசுரர் வணங்குநற்கோ முடியிற்மதி
தானவர்க்கோ இலதுகுணம் தந்தடியர் – ஆனவற்கோ
விந்தைமிகுச் சந்தமினித் துந்துபுகழ்ச் சிந்துமலர்த்
தந்தரவர் தந்ததுதி தான்!
(33)

குறிப்பு:

அத்வைதமான, மாறுபாடற்ற பரம்பொருளுக்கு குணங்கள் ஏது! எனவேதான் அவரைக் குணங்கள் அற்றவர் (நிர்கு3ணஸ்ய) என்ற சொல்லினால், ஆசிரியர் வணங்குகின்றார். அப்படிக் குணங்களற்ற, மனம், வாக்கு, செயல் எதனாலும் விளக்கப்பட முடியாத பரமாத்ம தத்துவத்தை, நாம் எப்படிப் புரிந்து கொள்வது, எப்படிப் புகழ்வது! அதனால்தான், குணங்களற்ற பரம்பொருளுக்கும், உயர்வான குணங்கள் இருப்பதாகச் சிறப்பித்து, சான்றோர்கள் நமது பக்திக்கு உதவி செய்திருக்கிறார்கள்.

புஷ்பதந்தரின் இனிமையான இத்துதி நூல், கரும்பைப் போன்று சற்றே கடினமான நடையுடன் இருந்தாலும், மிகுந்த சுவையுடன், பரம்பொருளைப் பரசிவனாகக்

கண்டு, சிவபுராணச் சிறப்புக்களைக் கூறி, மறைபொருளை விட்டு அகலாத அன்பால் வழிபடுகின்றது.

34

அஹரஹரனவத்$_3$யம் தூ$_4$ர்ஜடே: ஸ்தோத்ரமேதத் பட$_2$தி
பரமப$_4$க்த்யா ஶுத்$_3$த$_4$-சித்த: புமான் ய: |
ஸ ப$_4$வதி ஶிவலோகே ருத்$_3$ரதுல்யஸ்ததா$_2$(அ)த்ர
ப்ரசுரதர-த$_4$னாயு: புத்ரவான் கீர்திமாம்ஶ்ச || 34 ||

**பொருள்:**

மனத் தெளிவுடைய (ஶுத்$_3$த$_4$-சித்த:) எந்த (ய:) மனிதன் (புமான்), சடைச் சுமை தாங்கிய பெருமானுடைய (தூ$_4$ர்ஜடே:) இத்துதியை (ஏதத் ஸ்தோத்ரம்) உயர்வான (பரம) பக்தியுடன் (ப$_4$க்த்யா), நாள்தோறும் (அஹர்-அஹர்), தவறில்லாமல் (அனவத்$_3$யம்), படிக்கின்றானோ (பட$_2$தி), அவன் (ச:), புகழுடையவனாக (கீர்திமான்), மக்கட் செல்வமுடையவனாக (புத்ரவான்), நீண்ட ஆயுளும் (ஆயுஸ்) மற்றும் (ச) உயர்வானதும் (தர) அளவற்றதுமான (ப்ரசுர) வளமையையும் (த$_4$ன) இவ்வுலகில் (அத்ர) (பெற்று) மேலும் (ததா$_2$) சிவமாகிய நிலையில் (அதாவது தன்னுள் ஆத்மனை முழுமையாக உணர்ந்த நிலையில்) (ஶிவலோகே), உருத்திரன் (ருத்$_3$ர) என அவ்வாறாகவே (துல்ய:) ஆகி விடுகின்றான் (ப$_4$வதி). (34)

அடைச்சடைய னருட்புகழை அன்பிலனு தினமுமுறை
கடைப்படுவர் அடைவர் கைவல்யம் – இடைப்படவே
நந்நிதியம் நன்மக்கள் நாடுபுகழ் ஆயுளிவண்
பின்னுமுருத் திரனான பேர்!
(34)

குறிப்பு:

மெய்யடியார்கள், தங்களுடைய பக்தியின் பயனால் இறைவன் திருவடிவமாக விளங்கி, இறுதியில் இறைவனுள் கலப்பர் என இப்பாடல் காட்டியிருக்கிறது.

சாத்திரங்களிலும், புராணங்களிலும், இறைவனைத் தொழுபவர்கள் அடையும் பயனாக நான்கு உயரிய நிலைகள் காட்டப்பட்டுள்ளன.

அவை இறைவனின் உலகத்தில் இருத்தல் (ஸாலோக்யம்), இறைவனின் அருகிலேயே இருத்தல் (ஸாமீப்யம்), இறைவனது உருவாகவே இருத்தல் (ஸாரூப்யம்) மற்றும் இறைவனுடன் கலத்தல் (ஸாயுஜ்யம்) என்பன. இங்கே மெய்யடியார்கள் “ஸாரூப்யம்” எனும் இறைவனது வடிவாக ஆவர் எனவும், பொய்யுடல் வீழ்ந்தபிறகு, மெய்யான இறைவனுடன் கலக்கின்ற “ஸாயுஜ்யத்தை” அடைவார்கள் எனவும் காட்டப்பட்டது. இதனை ஒட்டிய குறிப்பு, மீண்டும் 38ம் பாடலில் தரப்பட்டுள்ளது.

முறை தவறாமல், தினமும் சிவனருளை நாடி இப்பாடல்களைப் பயிலுவோர், இவ்வுலகில் எல்லா நலத்தினையும் அடைந்து, நீண்ட ஆயுளுடன் வாழுவர். இறுதியில் பரசிவமாகிய உருத்திரன் வடிவாகி, இறைவனுள் கலப்பர்.

எனவே இம்மைக்கும், மறுமைக்கும் (அல்லது மறுமை இல்லாச் செழுமைக்கும்), இறைவனை விடாமல் வழிபடுகின்ற உண்மையான அன்பே போதுமானது என்பதை இப்பாடல் காட்டுகிறது.

அவ்வன்பினாலேயே, இறைவனைத் தவிர உயர்வானது வேறு ஏதும் இல்லை எனும் உறுதி நமக்குக் கிடைக்கிறது என்பதை மீண்டும் ஆசிரியர், அடுத்த பாடலில் குறிப்பிடுகின்றார்.

35

மஹேஶான்னாபரோ தே3வோ மஹிம்னோ நாபரா ஸ்துதி: |
அகோ4ரான்னாபரோ மந்த்ரோ நாஸ்தி தத்த்வம் கு3ரோ: பரம் || 35 ||

**பொருள்:**

சிவனினும் (மஹேஶாத்) மேலான (அபர:) தெய்வமில்லை (ந தே3வ:)! சிவப்புகழ் துதியினும் (மஹிம்னாத்) மேலான (அபர:) துதியுமில்லை (ந ஸ்துதி:)! அமைதியான வடிவம் என்பதைவிட (அகோ4ராத்) மேலான (அபர: ) மந்திரமில்லை (ந மந்த்ர:)! குருவாகிய (கு3ரோ:) சிவனின் உண்மையை (தத்வம்) விட உயர்வான (அபர:) (உணரப்படுவேண்டிய ) எதுவும் இல்லை (ந அஸ்தி:)! (35)

மதிக்கச் சிவனன்றித் தெய்வமேது மனதாரத்
துதிக்கச் சிவமன்றித் துணையேது – ஜெபிக்கத்
தவனுருவைப் போலேது தத்துவமும் வேறேது
சிவகுருவைச் சேரச் சிவம்!
(35)

**குறிப்பு:**

புஷ்பதந்தர் பரசிவத்தை விடப் பெரிய தெய்வம் இல்லை. பரசிவத்தைப் புகழ்கின்ற துதியினைவிடவும் உயர்வான துதிகள் இல்லை என இப்பாடலில் கூறுவது, ஆழ்ந்த வேதாந்தப் பொருளின் அடிப்படையில் காட்டிய உண்மை ஆகும். எல்லாமுமாகிய பரம்பொருள் ஒன்றே – ஸத், சித், ஆனந்தம் – என மாறாத முழுமைச் சுகமாய், அறிவொளியாய் எங்கும் பரவிய பரமாத்மாவாகவும், எல்லாவற்றுள்ளும் ஊடுருவிக் கிடக்கும் ஆத்மாவாகவும் விளங்குகிறது. அப்பரம்பொருளையே பரசிவமாகப் பார்த்து, புஷ்பதந்தர் இவ்வாறு ஆனந்தக் குரல்

எழுப்புகின்றார். எனவே ஒரு தெய்வ வடிவத்தை மட்டுமே முதன்மைப்படுத்தி வாதிடுவதல்ல இப்பாடல்! இறைவன் ஒன்றே எனும் மறைபொருளை மனதில்கொண்டு, இப்பாடலின் உயர்வை யாம் உணர வேண்டும்.

பரசிவத்தை குருவாகக் காட்டியிருப்பதன் மூலம், குருவின் மூலமாகவே பேருண்மையை உணர்ந்து, அப்பேருண்மையில் நம்மால் நிலைக்க முடியும் என்பதையும், நற்குருவைக் காட்டும் விளக்காகவும், நற்குருவாகவும் இருப்பதும் இறைவனது திருவருளே என்பதையும் ஆசிரியர் காட்டியுள்ளார். பக்தியின் முழுமைப் பலன், தக்க குருவினை அடைதலும், அவரால் விடுதலை அடைவதும் ஆகும். அதனையே நாமும் விழைதல் வேண்டும்.

தூய பக்தியும், உறுதியும் இருந்தால் மட்டுமே முழுமையான சரணாகதி நிகழும், அதனாலேயே எல்லாப் பயனும் விளையும் என்பதை அடுத்து வரும் பாடல்களில் ஆசிரியர் காட்டுகின்றார்.

36

தீ₃க்ஷா தா₃னம் தபஸ்தீர்த₂ம்
யோகம் யாகா₃தி₃கா: க்ரியா: |
மஹிம்னஸ்தவ பாட₂ஸ்ய
கலாம் நார்ஹந்தி ஷோட₃ஶீம் || 36 ||

**பொருள்:**

சமய வழிமுறை பெறுதல் (தீ₃க்ஷா), பிறருக்கு உதவல் (தா₃னம்), தூய ஒழுக்கம் (தபஸ்), புனிதப் பயணங்கள் (தீர்த₂ம்), யோகம் (யோக₃: ), யாகம் (யாக₃: ) ஆகியன (ஆதி₃கா: ) செய்தல் (க்ரியா:) – (ஆகிய இவை எல்லாம்) சிவனுடைய புகழாகிய (மஹிம்னா:) இத்துதியைப்

பயில்வதில் (ஸ்தவ பாட₂ஸ்ய) கிடைக்கும் நன்மையில், பதினாறில் (ஷோட₃ஶீம்) ஒரு பங்கு (கலாம்) தரவும் தகுதியற்றன (ந அர்ஹந்தி)! (36)

நற்படுதல் நல்லுதவி நற்பழக்கம் நற்பயணம்
உற்படுதல் ஈதல் உயர்செயலே – அற்பமிதே
துதியாலிச் சிவனாரம் துய்யுநலம் காணார்
பதினாறி லொன்றாய்ப் பலன்!
(36)

## குறிப்பு:

உலகில் நன்மக்கள் பதினாறு வகையான நன்மைகளை நாடுவர். அபிராமி அந்தாதியில் காட்டியபடி, அந்தப் பதினாறு வளங்களை கலையாத கல்வி, கபடமற்ற நட்பு, குறையாத வயது, குன்றாத வளமை, போகாத இளமை, பரவசமான பக்தி, பிணியற்ற உடல், சலியாத மனம், அன்பான துணை, தவறாத சந்தானம், தாழாத கீர்த்தி, மாறாத வார்த்தை, தடையற்ற கொடை, தொலையாத நிதி, கோணாத செயல், துன்பமில்லா வாழ்வு எனக் கொள்ளலாம்.

இறைவனின் அருளால் பதினாறாகிய வளங்களையும் உலகில் நாம் அடைய வேண்டும் என்றால் அதற்கு இறைவனைப் பணிந்து துதிக்கின்ற பக்தியே மிகவும் உயர்வானது எனக் காட்டுவதற்காகவே, புஷ்பதந்தர், பக்தியால் அடைகின்ற நன்மைகளில், பதினாறில் ஒரு பங்கினைக் கூட மற்ற நற்செயல்களான சமய நெறிப்படுதல், அறம் செய்தல், ஒழுக்கமாய் இருத்தல், புண்ணியத் தலங்களுக்குச் செல்லுதல், யோகம், தியாகம் முதலிய இவற்றால் அடைய முடியாது என்று சொல்கிறார். புண்ணியச் செயல்களாயினும், சாத்திரங்கள் காட்டுகின்ற நடைமுறை ஒழுக்கங்களை எல்லாம் இறைவனுக்கே

முழுமையாக அர்ப்பணிக்காமல், பிறருடைய புகழ்ச்சியைப் பொருட்டும், உண்மையான சரணாகதி என்னும் பணிவு இல்லாமலும் செய்வதால், எவ்விதப் பயனும் விளையப் போவதில்லை.

எனவே உண்மைப் பணிவுக்கு, பக்தியே சரியான பாதை. இத்துதியினை பக்தியுடனும் ஈடுபாட்டுடனும் பயில்கின்ற செயலினாலேயே, எல்லாப் பலனையும் நம்மால் அடைய முடியும் எனக் காட்டி, அடுத்த பாடலில் மீண்டும் சரணாகதியின் முக்கியத்துவத்தை ஆசிரியர் காட்டுகின்றார்.

37

குஸுமத3ஶன-நாமா ஸர்வ-க3ந்த4ர்வ-ராஜ:
ஶஶித4ரவர-மௌலேர்தே3வதே3வஸ்ய தா3ஸ: |
ஸ க2லு நிஜ-மஹிம்னோ ப்4ரஷ்ட ஏவாஸ்ய ரோஷாத்
ஸ்தவனமித3மகார்ஷீத்3 தி3வ்ய-தி3வ்யம் மஹிம்ன: || 37 ||

**பொருள்:**

தெய்வங்களின் தெய்வமான சிவனின் (தே3வதே3வஸ்ய) கோபத்தினால் (அஸ்ய ரோஷாத்), உண்மையில் (க2லு .. ஏவ) தனக்குரிய (நிஜ) சிறப்பிலிருந்து (மஹிம்னா:) வீழ்ந்து விட்டதால் (ப்4ரஷ்ட:), சிவனின் அடியாரும் (தா3ஸ:), இசை மீட்டும் தேவர்களுக்கு (க3ந்த4ர்வ) எல்லாம் (ஸர்வ) அரசனுமான (ராஜ:) புஷ்பதந்தர் (குஸுமத3ஶன) என அழைக்கப்பட்ட (நாமா), அவர் (ஸ:), தலையில் (மௌல) பிறைமதி சூடியவரின் (ஶஶித4ரவர) பெருமைகளாக (மஹிம்னா:) இந்த (இத3ம்) தெள்ளிய (தி3வ்ய) புனிதமான (தி3வ்யம்) புகழ்த் துதியை (ஸ்தவனம்) இயற்றினார் (ஆகார்ஷீத்)! (37)

பெருமா னருட்சினத்தால் பேரிழந்த காந்தருவ
உருவா னருட்சீலன் உருவித்தான் - திருவாக
பிறைமுடிவன் ஈசன் பேரிசையைப் பாவிசையாய்
நிறைவடியத் தந்தான் நிதி !
(37)

குறிப்பு:

புராணத்தின்படி, வானத்தில் உருவமில்லாமல், காந்தர்வராக விளங்கிய புஷ்பதந்தர், இறைவனின் திருவிளையாடலால், தன்னுடைய காந்தர்வ சக்தியை இழந்து பூமியில் இருந்தார். மீண்டும் தன்னுடைய காந்தர்வ நிலையை அடைந்து, இறைவனைத் தொழுது விளங்க, “சிவ மஹிம்னா ஸ்தோத்திரம்” எனும் இத்துதியைப் பாடினார் என்றும், முதல் மூன்று பாட்டிலேயே இறைவன் அவருக்கு அருளினார் என்றும் வரலாறு கூறுகிறது. இவ்வரலாற்றை இப்பாடல் நினைவு படுத்துகிறது.

புஷ்பதந்தரின் வாழ்க்கையிலிருந்து நாம் புரிந்து கொள்ள வேண்டியதெல்லாம், நம்முடைய முன்னேற்றத்தில் எப்போதாகிலும் எக்காரணத்தினாலேயும் நாம் பின்னடைவைச் சந்தித்தாலும், அதையும் இறைவனின் அருளாக ஏற்றுக் கொண்டு, இறைவன முற்றும் சரணடைந்து துதிப்பதாலேயே, அப்பின்னடைவைச் சரியானபடி சந்திக்கவும், பிறகு மீண்டும் உயர்வினை அடையவும் நம்மால் முடியும் என்பதே ஆகும்.

இறைவனை அல்லது நற்குருவிடம் முற்றுமாகச் சரணடைதல் என்பது பலருக்கும் எளிதில் முடியாத்தாகவே இருக்கிறது. ஏனெனில், சரணடைதல் என்பதை நாம் சரியாகப் புரிந்து கொள்ளாததும் ஒரு காரணம். இறைவனிடமும் நற்குருவிடமும் சரணடைதல் என்பது நமது பலவீனத்தின் அடையாளம் அல்ல, நம்முடைய பலத்துக்கும், முதிர்ச்சிக்கும் அடையாளம்.

முற்றிலும் தன்னைக் கொடுத்தல் என்பது, தன்னுடைய கர்வத்தையே அடக்கி அர்ப்பணிக்கின்ற அளப்பரிய வலிமை. அது எல்லோராலும் முடிவதில்லை.

மேலும் சரணடைதல் என்பது, பொறுப்புக்களை மாற்றி, அவற்றைச் செயலாக்கும் பளுவிலிருந்து விடுதலை அடைதல் என்பதாகும். தந்தையின் கைகளைப் பிடித்துக் கொண்டுள்ள குழந்தைக்கு, சாலையைக் கடக்கின்ற பொறுப்பு இல்லை! அப்பொறுப்பைத் தந்தையிடம் கொடுத்தாகிவிட்டது என்பதால், மகிழ்ச்சியாக, அதுவும் ஒரு விளையாட்டாக அக்குழந்தைக்கு ஆகி விடுகிறது.

அதுபோலவே இறைவனிடம் நாம் முற்றும் சரணடைந்துவிட்டால், நம்முடைய பொறுப்புக்களையும் இறைவனின் திருவடிகளில் வைத்து விடுகிறோம். நம்முடைய வாக்கு, மனம், செயல் எல்லாம் இறைவனின் பொறுப்பினாலேயே இயங்குவதான பாவனை நமக்கு வந்துவிடும். அதனால் துயரம் இல்லை.

முற்றுமாக சரணடைதல் என்பது, ஒருவர் தம்மையே முற்றுமாக அளிப்பது என்பதாகும். ஒவ்வொருவருக்கும் அவரவரே மிகப்பெரிய பொருள். எனவே தன்னையே அளிப்பதால், ஒருவர் தன்னால் கொடுக்க முடிவதில் எது உன்னதனமானதோ அதையே கொடுக்கிறார் என்பதாகிறது. அவ்வன்பளிப்பை ஏற்றுக் கொண்ட இறைவனுக்கு, தன்னையே திருப்பித் தருவதைத் தவிர வேறு வழியில்லை அல்லவா! அதனால், சரணடைவருக்கு இறைவனே சரியான பரிசாக அமைகின்றார். சரணடைவரின் இதயத்தில் முழு நிறைவான ஆத்ம சக்தியாக, இறைவன் ஒளிவிடுகின்றார். எனவே சரணடைதல் எனும் அரிய பாதையை நாம் “சிக்கெனப்” பிடித்துக் கொள்ள வேண்டும். அப்படி சரணடைவதன் பலன் அடுத்த பாடலில் தரப்படுகிறது.

38

ஸுரகு3ருமபி4பூஜ்ய ஸ்வர்க3-மோக்ஷைக-ஹேதும்
பட2தி யதி3 மனுஷ்ய: ப்ராஞ்ஜலிர்னான்ய-சேதா: |
வ்ரஜதி ஶிவ-ஸமீபம் கின்னரை: ஸ்தூயமான:
ஸ்தவனமித3மமோக4ம் புஷ்பத3ந்தப்ரணீதம் || 38 ||

### பொருள்:

புஷ்பதந்தரால் (புஷ்பத3ந்த), இயற்றப்பட்ட (ப்ரணீதம்), என்றும் தோல்வியைத் தராத (அமோக4ம்) இத்துதிகளினால் (இத3ம் ஸ்தவனம்), மனிதன் (மனுஷ்ய:) மனம் (சேதா:) ஒருமுகப்பட்டு, (ந அன்ய), கைகளைக் கூப்பித் (ப்ராஞ்ஜலி:) துதித்தால் (பட2தி யதி3), விண்ணுலகப் பேறு (ஸ்வர்க3), வீடு பேறு (மோக்ஷ) இவற்றுக்கு வழியாகி (ஏக ஹேது), கின்னரராகிய தேவர்களால் (கின்னரை:) போற்றப்பட்டு (ஸ்தூயமான:) தேவர்களாலும், (ஸுர) சிறந்த முனிவர்களாலும் (வர முனி) தொழப்பட்டு (பூஜ்யம்) சிவபெருமானின் அருகிலே (ஶிவ ஸமீபம்) சென்றடைவான் (வ்ரஜதி)! (38)

வரமலர்த் தந்தர் வளமிகுச் சந்தம்
கரமனத் துந்தக் கனிவரைச் - சுரமுனிக்
கின்னரரும் ஏற்றிக் கீழ்பணிவர் நல்வீடு
தன்னருகிற் சிவமாய்த் தவம்!
(38)

### குறிப்பு:

புஷ்பதந்தரால் தரப்பட்ட இந்தப் பாமாலை சுகத்தைத் தரவல்லது. இதனை பக்தியுடனும் ஈடுபாட்டுடனும் படித்து, மனமும், கரமும் குவியப் பணிந்து தொழுபவர்கள் இவ்வுலகில் மட்டுமல்லாது, விண்ணுலகிலும் பயன் அடைந்து, தேவர்கள், முனிவர்கள், கின்னரர்கள் என

எல்லோரும் அடிபணிந்து போற்ற, சிவனுலகில், பரசிவத்தின் அருகிலேயே இருக்கும் நலனை அடைகிறார்கள். இறைவனை அப்படித் துதிப்பவர்கள், எல்லோராலும் போற்றப்பட்டு, இறைவனின் உலகத்திலே நிலைப்பார்கள் எனக் கூறுகின்றது.

சாத்திரங்களிலும், புராணங்களிலும், இறைவனைத் தொழுபவர்கள் அடையும் பயனாக நான்கு உயரிய நிலைகள் காட்டப்பட்டுள்ளன. அவை இறைவனின் உலகத்தில் இருத்தல் (ஸாலோக்யம்), இறைவனின் அருகிலேயே இருத்தல் (ஸாமீப்யம்), இறைவனது உருவாகவே இருத்தல் (ஸாரூப்யம்) மற்றும் இறைவனுடல் கலத்தல் (ஸாயுஜ்யம்) என்பன.

அத்வைத வேதாந்தத்தின் அடிப்படையில் இக்கருத்தை ஆய்ந்தால், இவற்றுக்கான பொருள் சிறப்பாக விளங்கும்.

“இறைவனின் உலகம்” என்று ஒன்று இருந்தால், “இறைவன் இல்லாத உலகம்” என ஒன்று இருந்தாக வேண்டுமே! எல்லா இடத்திலும் இருப்பவன் இறைவன் என்றால், இறைவன் இல்லாத இடம் எப்படி இருக்க முடியும்! அதேபோல, இறைவனின் மிக அருகிலிருத்தல் என்றால், இறைவனை விட்டுத் தொலைவில் இருப்பது என்பதும் சாத்தியமாக வேண்டுமே! அதனால் இறைவனுக்கும், நமக்கும் இடைவெளி இருந்தாக வேண்டும்! அவ்விடைவெளி, இறைவன் இல்லாத வெளி என்றாகிவிடுமே! அப்படியானால், இறைவன் இல்லாத இடமும் இருக்கிறது என்ற முரண்பாடு வந்துவிடுமே! இறைவனது உருவமாக எப்படி ஆவது! நீள, உயர, அகலப் பரிமாணங்கள் அற்றவன் என்பதால் இறைவன் உருவங்களற்றவன் எனவும் வேதாந்தம் சொல்கிறதே!

எனவே இறைவனின் உலகத்தை அடைதல், இறைவனின் அருகாமையை அடைதல், இறைவனின் உருவத்தை

அடைதல் எனும் இம்மூன்றுக்கும், மற்ற பொருள் இருந்தாக வேண்டும்.

இதற்கு முதலில் "உலகம்" எனும் சொல்லை எடுத்துக் கொள்வோம். சம்ஸ்கிருத மொழியில் "லோகம்" எனும் சொல்லை நாம் உலகம் எனத் தமிழ்ப் படுத்தியுள்ளோம்.

லோகம் என்பது 'லுக்' எனும் வேர்ச்சொல்லில் விளைந்தது. 'லுக்` என்றால் பார்ப்பது, அல்லது புலனறிவால் தெரிவது. எனவே லோகம் என்பதும், அதனுடைய தமிழ்ச் சொல்லான உலகம் என்பதும் ஒவ்வொருவரின் அனுபவக்களம். எனவே நாம் ஒவ்வொருவரும், நமது அனுபவங்களுக்கேற்ப உலகங்களைப் படைத்துக் கொண்டு, அதற்குள்தான் வாழ்கிறோம். வெளியிலே இருக்கின்ற உலகத்தை நாம் பார்த்து அதன் அனுபவத்தினால், நமக்குள் ஒரு உலகத்தைப் படைத்துக் கொள்கிறோம்.

எனவே இறைவனின் உலகம் என்பது, எங்கே இறைச்சிந்தனையும், இறைஅனுபவமுமே நிறைந்து இருக்கிறதோ அதுவே ஆகும். இறைவனின் பெருமைகளைப் பாடுகின்ற இத்துதிகளில் களித்திருப்பவர்களுக்கு, அப்படியான ஒரு உலகம் கிடைக்கிறது என்பதே அதன் கருப்பொருள்.

எனவே "இறைவனின் உலகத்தை அடைதல்" என்பதன் மெய்ப்பொருள், நம்முடைய சிந்தனை செயல் எல்லாம் இறைவனைப் பற்றியே இருக்கின்ற அனுபவத்தை அடைதல் என்பதாகும்.

அடுத்து, "இறைவனின் அருகில் இருத்தல்" என்பது இறைவனை நமக்குள்ளேயே உணர்ந்து, அந்நிலையை விட்டு விலகாமல் இருத்தல். ஏனெனில், நமக்கு மிக அருகிலிருப்பது நாமல்லவோ! அதுவே "ஸாமீப்யம்". அப்படித் தன்னுள் தானாக ஒருவர் இருந்தால், அவரது

புனிதத் தோற்றம், உலகோர்க்கு அவரை இறைவனின் திருவுருவமாகவே காணும்படிச் செய்யும். அதையே "ஸாரூப்யம்" எனும் பதவியினால் சாத்திரங்கள் காட்டுகின்றன.

பிறகு அன்னார் ஜீவன் முக்தராக உலகில் இருந்துவிட்டு, உடலை எப்போதேனும் விட்டுவிட்டு, இறைவனுடனேயே இரண்டறக் கலந்து விடுவார். வேதாந்தம், உடலோடு உலகிலிருக்கும்போதுகூட அன்னார், இறைச்சிந்தனையில் தன்னை இழந்து ஒரு ஜீவன் முக்தராகவே இருக்கிறார் எனக் காட்டுகிறது. இவ்வாறு இறைவனுடன் கலந்துவிடுதலே "ஸாயுஜ்யம்" எனும் பெருநிலை. இவ்வுண்மையினையே இத்துதி நமக்கு நினைவூட்டுகிறது.

## 39

ஆஸமாப்தமித$_3$ம் ஸ்தோத்ரம் புண்யம் க$_3$ந்த$_4$ர்வ-பா$_4$ஷிதம் |
அனௌபம்யம் மனோஹாரி ஸர்வமீஶ்வரவர்ணனம் || 39 ||

**பொருள்:**

ஈஸ்வரனின் (ஈஶ்வர) வியக்கவைக்கும் (மனோஹாரி) எல்லாப் பெருமைகளையும் விளக்கும் (வர்ணனம் ஸர்வம்), புஷ்பதந்தரால் இயற்றப்பட்ட (க$_3$ந்த$_4$ர்வ-பா$_4$ஷிதம்) ஒப்புமையில்லாத (அனௌபம்யம்), புனிதமான துதி (புண்யம் ஸ்தோத்ரம்), இவ்விதம் (இத$_3$ம்) நிறைவு பெறுகிறது (ஆஸமாப்தம்)! (39)

அந்தரனின் சுந்தரனின் விந்தைமிகு செந்தகையை
சந்தமிகு வந்தனையில் தந்துதவக் – கந்தருவ
சீலரவர் செய்தளித்த சீரருமைத் துதிநூலின்
மூலமிவண் முடியும் முறை!
(39)

**குறிப்பு:**

இறைவனது புகழ் வியக்க வைப்பதாகவும் விளக்க முடியாததாகவும் இருக்கிறது. அவற்றை எல்லாம் நம்முடைய அறிவின் எல்லைக்குட்பட்ட மொழியினால் தருகின்ற, புஷ்பதந்தர் எனும் கந்தர்வரின் இத்துதி நூல், இங்கே முறையாக முடிவடைகிறது.

40

இத்யேஷா வாங்மயீ பூஜா ஸ்ரீமத்ச₂ங்கர-பாத₃யோ: |
அர்பிதா தேன தே₃வேஶ: ப்ரீயதாம் மே ஸதா₃ஶிவ: || 40 ||

**பொருள்:**

இவ்வாறு (இதி), சொற்களுடைய (வாங்மயி) இத்துதி (யேஷா பூஜா) அருள் வடிவான (ஸ்ரீமத்) சங்கரரின் திருவடிகளில் (ச₂ங்கர பாத₃யோ:) படைக்கப்படுகிறது (அர்பிதா)! இதன் மூலம் (தேன) தெய்வங்களுக்கெல்லாம் தெய்வமாகிய (தேவேஶ) சதாசிவம் (ஸதா₃ஶிவ), என்னிடம் (மே) மகிழ்ச்சி அடையட்டும் (ப்ரீயதாம்)! (40)

மங்களமாய்ச் சொற்கள் மணியாரத் துதிமாலை
சங்கரனார் திருவடிகள் சாரவே – இங்கிதனால்
பேரிறையே சதாசிவப் பெம்மானே மெய்யின்ப
மேவியென துள்ளே மிகு!
(40)

**குறிப்பு:**

முதற்பாடலில் புஷ்பதந்தர், இறைவனை, அடியார்களின் மும்மலங்களையும் கவரும் திருடனே (ஹரனே) என அழைத்தார். மும்மலங்களில் முக்கியமானது, ஆணவ

மலம் என்பது. அதுவே "நான் யார்" என்பதை அறியாமல், உடலையும் மனதையும் 'தான்' என கற்பித்து இருக்கும் செருக்கு. அதனையே "ஜீவ பாவம்" என வேதாந்தம் அழைக்கிறது. அறியாமைதான் அதற்கான வித்து.

பகவான் ஆதிசங்கரர், அறியாமை என்பதை 'எவரிடத்தில் தான் ஆத்மா என்ற நுண்ணுர்வு இல்லையோ, அவரிடத்தில் இருக்கும் அறிவுக்குத்தான் அறியாமை என்பது பெயர்' எனச் சொல்கிறார். அதாவது, மாறாது இருக்கும் "ஆத்மாவே நான்" என்பதை உணராதவர், எத்தனை படித்திருந்தாலும், அவருக்கு வேத சாத்திரங்களில் பெரிய அறிவு இருந்தாலும் கூட, அந்த அறிவெல்லாம் அறியாமைதான். ஏனெனில், அவற்றால் பேருண்மையை உணர முடியாது. மாறிக்கொண்டே இருக்கும் உலகில் நாம் மன்றாடிக் கொண்டே இருக்கச் செய்கின்ற வழிகளைத்தான் அவை தந்து கொண்டிருக்கும். எப்போது, ஒருவருக்குள், "நான் மாறாது ஒளிரும் ஆத்மா" என உணர்ந்து அவ்வுணர்விலே நிலைக்க முடிகிறதோ, அப்போதே 'ஜீவ பாவம்' அகன்று, 'ஆத்ம போதம்' எனும் மெய்யறிவு அவருள் ஒளிரத் தொடங்கிவிடும். அந்த ஒளிவெள்ளத்தில் "தொடக்கம்" என இல்லாது நம்முள்ளே பலகாலமாய்த் தொடர்ந்து வந்த அறியாமை, அக்கணத்திலே முடிந்துவிடும்.

ஆனால் நம்மால் ஆணவமலத்தை அவ்வளவு எளிதாகக் கைவிட முடிவதில்லை! வேதாந்த நெறிகளை எல்லாம் நன்றாகப் படித்திருந்தாலும் உடல், மனம், அறிவு என நாம் சுமந்து கொண்டிருப்பன எல்லாவற்றையும் "நான் அல்ல" எனத் தள்ளி, நம்முள் நம்மை உணர்ந்து அதிலேயே நிலைக்கின்ற தீரச்செயலுக்கு நாம் எளிதில் துணிவது கிடையாது. அதற்கு ஆணவமலம் முக்கியக் காரணம்.

எனவேதான் கருணையினால் பரசிவன் நம்மிடமிருந்து, நமது ஆணவத்தை நாம் அறியாமலேயே திருடிச்

சென்றுவிடுகிறார். அந்த நல்ல திருட்டு நடைபெறுவதற்கு, நம்முடைய இதயத்தைத் திறந்து வைக்க வேண்டும். அதிலே இறைச் சிந்தனையை ஏற்றி வைக்க வேண்டும். பக்தியும் ஈடுபாடும் கொண்டு, இறைவனைச் சரணடைவது மட்டுமே நமது நல்வழியாக வேண்டும்.

இப்பாடலில், ஆசிரியர் இறைவனை எல்லா நலனையும் தருகின்ற “சங்கரர்” என அழைக்கிறார். அடியேனுக்கு, புஷ்பதந்தரின் இப்பணிவு, அவர் தனது படைப்பை, ஜகத்குருவாகிய பகவான் ஆதி சங்கரரின் திருவடிகளுக்குப் படைப்பதாகவே காட்டுகிறது. காரிருள் கிழித்த கதிரவனாக வந்து, பரமாத்ம தத்துவத்தைப் பாரெங்கும் மீண்டும் பதித்த ஞான குரு அல்லவா ஆதி சங்கரர்! அவர் பரசிவக் கருணையல்லவா! குருவின் அருளால், நமது எல்லாத் தீவினைகளும், ஆத்ம ஞானம் எனும் தீயினால் அழிக்கப்பட்டு, அதன் விளைவாக, எப்போதும் மாறாத, "ஸதாசிவம்" என இருந்து ஒளிரும் இன்பமாக (சத்-சித்-சுகம்) அப்பேருண்மை நமக்குள்ளே பிரகாசிக்கட்டும்! அப்பேரொளியில் நாம் கலந்து இருந்தால், அதுவே "ஜீவன் முக்தர்" எனும் முற்றும் விடுதலை அடைந்தவரான உயர்நிலை. இவ்வுலகில் இருக்கும்போதே, இப்போதே நம்மால் உய்ய முடிகின்ற பெருநிலை!

41

தவ தத்வம் ந ஜானாமி கீத்₃ருஶோ(அ)ஸி மஹேஶ்வர |
யாத்₃ருஶோ(அ)ஸி மஹாதே₃வ தாத்₃ருஶாய நமோ நம: || 41 ||

**பொருள்:**

பேரிறைவா (மஹேஶ்வர)! தங்கள் (தவ) மெய்த்தன்மை (தத்-த்வம்), எப்படிப்பட்டதாக இருக்கிறது (கீத்₃ருஶோ

அஶி) யான் அறிகிலேன் (ந ஜானாமி)! எப்படியாகவெல்லாம் தாங்கள் இருந்தாலும் (யாத்3ருஶோ அஶி), பெருமானே (மஹாதே3வ), அந்த உண்மைக்கே (தாத்3ருஶாய), மீண்டும் மீண்டும் (என்) பணிவுகள் (நமோ நம:)! (41)

எதுவெலாம் நினதருள் எத்தன்மை நின்னது
அதுவெலா மறியே னிறையே – எதுவெனினும்
ஆற்றருட் பேறே அதியோனே நின்னருளைப்
போற்றுவேன் போற்றி போற்றி!
(41)

குறிப்பு:

பரசிவத்தை எப்படி முழுமையாக உணர்ந்து, சரியாகப் புகழமுடியும்? வேதங்களும்கூட இறைவனை மனதாலும், மொழியாலும் அறியப்பட முடியாத பொருளாக அல்லவா காட்டி இருக்கின்றன! அதனால், அப்படியான ஆராய்ச்சிகளில் ஈடுபட்டு என்னால் முடிவினைக் காண முடியாது என்பதால், "தாங்கள் எப்படி எல்லாம் இருந்தாலும், என் அறிவின் முதிர்ச்சிக்கு ஏற்ப, நான் உங்களை விடாமல் பணிவடைந்து, போற்றிக் கொண்டே இருப்பேன்" என ஆசிரியர் புகழ்கிறார்.

42

ஏககாலம் த்3விகாலம் வா த்ரிகாலம் ய: படே2ன்னர: |
ஸர்வபாப-வினிர்முக்த: ஶிவ லோகே மஹீயதே || 42 ||

பொருள்:

ஒருமுறை (ஏககாலம்), இரு முறை (த்3விகாலம்) மற்றும் (வா) மூன்று முறை (த்ரிகாலம்) எந்த மனிதர் படிக்கிறாரோ

(ய படே₂ன்னர:) அவர் எல்லாப் பாவங்களிலிருந்தும் (ஸர்வபாப) விடுதலை அடைந்தவராக (வினிர்முக்த:), சிவனுலகில் சேர்ந்து, அதாவது ஆத்ம ஞானத்தில் நிலைத்தவராக (ஶிவ லோகே), பெரும் சிறப்படைகிறார் ( மஹீயதே)! (42)

காலை பகலிரவுக் காலமுஞ் சிவனருளை
வேளை தவறாது வேதிப்பார் - சீலமுடன்
பொல்லா வினையவிழப் புகுவார் சிவனடிகள்
எல்லாப் புகழதனா லேறு!
(42)

குறிப்பு:

ஒருமுறை, இருமுறை, மும்முறை என்பதை காலை, பகல், இரவு என நாள் முழுவதுமாக நாம் கொள்ளலாம். ஒழுக்கத்திற்காக, இப்படி மூன்று காலங்களிலும் இறைவனைத் துதிப்பது நலம் எனப் பெரியோர்கள் கூறியிருக்கிறார்கள். எக்காலத்திலும் நாம் நமது மனதை இறைவனிடத்திலேயே வைத்திருக்க வேண்டும் என்பதே அதன் குறிக்கோள். மனதில் எப்போதும் இறைச் சிந்தனையே இருக்கும்படி நாம் செய்துவிட்டால், (அடுத்த நொடியில் மனம் என்ன நினைக்கும் என்பதையும் தெரியாமல், மனதிற்கே முற்றிலும் அடிமையாகக் கிடக்கும் நாம்) மனதைக் கட்டுப்படுத்துகின்ற அதிகாரிகளாகி விடுகிறோம் அல்லவா! அப்படிப்பட்ட மனச்சீர்மைக்காகவே இறைவனது திருநாமங்களை மனதில் எப்போதும் விளைத்துக் கொண்டிருக்கும் தவத்தினை நமக்குச் சாத்திரங்கள் காட்டுகின்றன! மனச்சீர்மையினால் ஆசை, பயம், கோபம் முதலான தூண்டுதல்கள் எதுவும் இல்லாமல், அதனால் பழிச்செயல்களும், பாவங்களும் அற்றவர்களாக,

பரசிவமாகிய புனிதத்தைச் சுமந்தவர்களாகவே நாம் ஆகிவிடலாம். இதுவே இப்பாடலின் கரு.

43

ஶ்ரீ புஷ்பத$_3$ந்த-முக$_2$-பங்கஜ-நிர்க$_3$தேன
ஸ்தோத்ரேண கில்பி$_3$ஷ-ஹரேண ஹர-ப்ரியேண |
கண்ட$_2$ஸ்தி$_2$தேன படி$_2$தேன ஸமாஹிதேன
ஸுப்ரீணிதோ ப$_4$வதி பூ$_4$தபதிர்மஹேஶ: || 43 ||

பொருள்:

அருள்மிகு புஷ்பதந்தரின் (ஶ்ரீ புஷ்பத$_3$ந்த) தாமரை வாயிலிருந்து (முக$_2$-பங்கஜ) வெளிப்பட்ட (நிர்க$_3$தேன) இத்துதியினை (ஸ்தோத்ரேண), (அதை) மனப்பாடம் செய்தாலும் (கண்ட$_2$ஸ்தி$_2$தேன), படித்தாலும் (படி$_2$தேன), கேட்டாலும் (ஸமாஹிதேன), பாவங்களைக் களைபவரும் (கில்பி$_3$ஷ-ஹரேண), (மும்மலங்களையும்) அழிப்பவரும் (ஹர:), எல்லாவற்றுக்கும் தலைவனும் (பூ$_4$தபதி:), தெய்வத்தின் தெய்வமும் (மஹேஶ:) ஆகிய அன்புக்குரிய சிவன் (ப்ரியேண) மிகுந்த மகிழ்ச்சியை அடைகிறார் (ஸுப்ரீணிதோ ப$_4$வதி)! (43)

தாமரை வாய்ப்புஷ்ப தந்தரவர் சந்தமிதை
தூமறை யாயுள்ளத் துள்ளுணர – நேயமிகும்
பெம்மான் இடரழியப் பேரீச னாயின்பம்
எம்மான் எனவுள் ளெழும்!
(43)

குறிப்பு:

புஷ்பதந்தருடைய மலர் போன்ற வாயிலிருந்து வெளிவந்தது என்று சொல்வதன் மூலம், கவிதை என்பதும்,

இறைவனின் அருளினாலேயே வெளிப்படுகிறது என்பது இவண் காட்டப்பட்டது. ஆத்மாவின் ஒளியில்லாமல், சடமாகிய உடலும், மனமும் எதனைத்தான் சாதிக்க வல்லன!

இறுதியாக, எவர் இத்துதியினைப் படித்தும், கேட்டும், மனதில் இறைவனின் பெருமையை எப்போதும் தம்முள்ளேயே உணர்ந்து இருக்கிறாரோ, அவரிடத்தில் இறைவன் எப்போதும் மிகுந்த மகிழ்ச்சியாக இருக்கிறார் எனவும், அம்மகிழ்ச்சி எப்படி வெளிப்படுகிறது என்றால், ஆசை, துயரம், குழப்பம் (ராகம், ஷோகம், மோஹம்) எல்லாவற்றுக்கும் காரணமான அறியாமை எரிக்கப்பட்டு, அந்த அடியாரின் உள்ளத்தில் ஆத்மாவின் ஒளி நிறைந்து, அவருக்குள் முழுமையான நிறைவை அளித்து, அன்னாரைப் புனிதராக, தூயவராக, முற்றும் உணர்ந்த ஞானியாக உலகுக்கு வெளிச்சம் இட்டுக் காட்டுகின்றது எனவும் இப்பாடல் உறுதி அளிக்கின்றது.



|| இதி ஶ்ரீ புஷ்பத₃ந்த விரசிதம்
ஶிவமஹிம்ன: ஸ்தோத்ரம் ஸமாப்தம்||

இவ்விதம் ஶ்ரீ புஷ்பதந்தர் அருளிய
சிவ மஹிமை தோத்திரம் நிறைவடைகிறது.

॥ ॐ नमः शिवाय ॥

॥ अथ श्री शिवमहिम्नस्तोत्रम् ॥

महिम्नः पारं ते परमविदुषो यद्यसदृशी
स्तुतिर्ब्रह्मादीनामपि तदवसन्नास्त्वयि गिरः ।
अथाऽवाच्यः सर्वः स्वमतिपरिणामावधि गृणन्
ममाप्येष स्तोत्रे हर निरपवादः परिकरः ॥१॥

अतीतः पंथानं तव च महिमा वाङ्मनसयोः
अतद्व्यावृत्त्या यं चकितमभिधत्ते श्रुतिरपि ।
स कस्य स्तोतव्यः कतिविधगुणः कस्य विषयः
पदे त्वर्वाचीने पतति न मनः कस्य न वचः ॥२॥

मधुस्फीता वाचः परमममृतं निर्मितवतः
तव ब्रह्मन् किं वागपि सुरगुरोर्विस्मयपदम्।
मम त्वेतां वाणीं गुणकथनपुण्येन भवतः
पुनामीत्यर्थेऽस्मिन् पुरमथन बुद्धिर्व्यवसिता ॥३॥

तवैश्वर्यं यत्तज्जगदुदयरक्षाप्रलयकृत्
त्रयीवस्तु व्यस्तं तिस्रुषु गुणभिन्नासु तनुषु।
अभव्यानामस्मिन् वरद रमणीयामरमणीं
विहन्तुं व्याक्रोशीं विदधत इहैके जडधियः ॥४॥

किमीहः किंकायः स खलु किमुपायस्त्रिभुवनं
किमाधारो धाता सृजति किमुपादान इति च।
अतर्क्यैश्वर्ये त्वय्यनवसर दुःस्थो हतधियः
कुतर्कोऽयं कांश्चित् मुखरयति मोहाय जगतः ॥५॥

अजन्मानो लोकाः किमवयववन्तोऽपि जगतां
अधिष्ठातारं किं भवविधिरनादृत्य भवति।
अनीशो वा कुर्याद् भुवनजनने कः परिकरो
यतो मन्दास्त्वां प्रत्यमरवर संशेरत इमे ॥६॥

त्रयी साङ्ख्यं योगः पशुपतिमतं वैष्णवमिति
प्रभिन्ने प्रस्थाने परमिदमदः पथ्यमिति च।
रुचीनां वैचित्र्यादृजुकुटिल नानापथजुषां
नृणामेको गम्यस्त्वमसि पयसामर्णव इव ॥७॥

महोक्षः खट्वाङ्गं परशुरजिनं भस्म फणिनः
कपालं चेतीयत्तव वरद तन्त्रोपकरणम्।
सुरास्तां तामृद्धिं दधति तु भवद्भूप्रणिहितां
न हि स्वात्मारामं विषयमृगतृष्णा भ्रमयति ॥८॥

ध्रुवं कश्चित् सर्वं सकलमपरस्त्वध्रुवमिदं
परो ध्रौव्याऽध्रौव्ये जगति गदति व्यस्तविषये।
समस्तेऽप्येतस्मिन् पुरमथन तैर्विस्मित इव
स्तुवन् जिह्रेमि त्वां न खलु ननु धृष्टा मुखरता ॥९॥

तवैश्वर्यं यत्नाद् यदुपरि विरिञ्चिर्हरिरधः
परिच्छेतुं यातावनलमनलस्कन्धवपुषः।
ततो भक्तिश्रद्धा-भरगुरु-गृणद्भ्यां गिरिश यत्
स्वयं तस्थे ताभ्यां तव किमनुवृत्तिर्न फलति ॥१०॥

अयत्नादासाद्य त्रिभुवनमवैरव्यतिकरं
दशास्यो यद्बाहूनभृत रणकण्डू-परवशान्।
शिरःपद्मश्रेणी-रचितचरणाम्भोरुह-बलेः
स्थिरायास्त्वद्भक्तेस्त्रिपुरहर विस्फूर्जितमिदम् ॥११॥

अमुष्य त्वत्सेवा-समधिगतसारं भुजवनं
बलात् कैलासेऽपि त्वदधिवसतौ विक्रमयतः।
अलभ्या पातालेऽप्यलसचलितांगुष्ठशिरसि
प्रतिष्ठा त्वय्यासीद् ध्रुवमुपचितो मुह्यति खलः ॥१२॥

यदृद्धिं सुत्राम्णो वरद परमोच्चैरपि सतीं
अधश्चक्रे बाणः परिजनविधेयत्रिभुवनः।
न तच्चित्रं तस्मिन् वरिवसितरि त्वच्चरणयोः
न कस्याप्युन्नत्यै भवति शिरसस्त्वय्यवनतिः ॥१३॥

अकाण्ड-ब्रह्माण्ड-क्षयचकित-देवासुरकृपा
विधेयस्याऽऽसीद् यस्त्रिनयन विषं संहृतवतः।
स कल्माषः कण्ठे तव न कुरुते न श्रियमहो
विकारोऽपि श्लाघ्यो भुवन-भय- भङ्ग- व्यसनिनः ॥१४॥

असिद्धार्था नैव क्वचिदपि सदेवासुरनरे
निवर्तन्ते नित्यं जगति जयिनो यस्य विशिखाः।
स पश्यन्नीश त्वामितरसुरसाधारणमभूत्
स्मरः स्मर्तव्यात्मा न हि वशिषु पथ्यः परिभवः ॥१५॥

मही पादाघाताद् व्रजति सहसा संशयपदं
पदं विष्णोर्भ्राम्यद् भुज-परिघ-रुग्ण-ग्रह- गणम्।
मुहुर्द्यौर्दौस्थ्यं यात्यनिभृत-जटा-ताडित-तटा
जगद्रक्षायै त्वं नटसि ननु वामैव विभुता ॥१६॥

वियद्व्यापी तारा-गण-गुणित-फेनोद्गम-रुचिः
प्रवाहो वारां यः पृषतलघुदृष्टः शिरसि ते।
जगद्द्वीपाकारं जलधिवलयं तेन कृतमिति
अनेनैवोन्नेयं धृतमहिम दिव्यं तव वपुः ॥१७॥

रथः क्षोणी यन्ता शतधृतिरगेन्द्रो धनुरथो
रथाङ्गे चन्द्रार्कौ रथ-चरण-पाणिः शर इति।
दिधक्षोस्ते कोऽयं त्रिपुरतृणमाडम्बर-विधिः
विधेयैः क्रीडन्त्यो न खलु परतन्त्राः प्रभुधियः ॥१८॥

हरिस्ते साहस्रं कमल बलिमाधाय पदयोः
यदेकोने तस्मिन् निजमुदहरन्नेत्रकमलम्।
गतो भक्त्युद्रेकः परिणतिमसौ चक्रवपुषः
त्रयाणां रक्षायै त्रिपुरहर  जागर्ति जगताम् ॥१९॥

क्रतौ सुप्ते जाग्रत् त्वमसि फलयोगे क्रतुमतां
क्व कर्म प्रध्वस्तं फलति पुरुषाराधनमृते।
अतस्त्वां सम्प्रेक्ष्य क्रतुषु फलदान-प्रतिभुवं
श्रुतौ श्रद्धां बध्वा दृढपरिकरः कर्मसु जनः ॥२०॥

क्रियादक्षो दक्षः क्रतुपतिरधीशस्तनुभृतां
ऋषीणामार्त्विज्यं शरणद सदस्याः सुर-गणाः।
क्रतुभ्रंशस्त्वत्तः क्रतुफल-विधान-व्यसनिनः
ध्रुवं कर्तुः श्रद्धा-विधुरमभिचाराय हि मखाः ॥२१॥

प्रजानाथं नाथ प्रसभमभिकं स्वां दुहितरं
गतं रोहिद् भूतां रिरमयिषुमृष्यस्य वपुषा।
धनुष्पाणेर्यातं दिवमपि सपत्राकृतममुं
त्रसन्तं तेऽद्यापि त्यजति न मृगव्याधरभसः ॥२२॥

स्वलावण्याशंसा धृतधनुषमह्नाय तृणवत्
पुरः प्लुष्टं दृष्ट्वा पुरमथन पुष्पायुधमपि।
यदि स्त्रैणं देवी यमनिरत-देहार्ध-घटनात्
अवैति त्वामद्धा बत वरद मुग्धा युवतयः ॥२३॥

श्मशानेष्वाक्रीडा स्मरहर पिशाचाः सहचराः
चिता-भस्मालेपः स्रगपि नृकरोटी-परिकरः।
अमङ्गल्यं शीलं तव भवतु नामैवमखिलं
तथापि स्मर्तॄणां वरद परमं मङ्गलमसि ॥२४॥

मनः प्रत्यक्चित्ते सविधमविधायात्त-मरुतः
प्रहृष्यद्रोमाणः प्रमद-सलिलोत्सङ्गति-दृशः।
यदालोक्याह्लादं ह्रद इव निमज्यामृतमये
दधत्यन्तस्तत्त्वं किमपि यमिनस्तत् किल भवान् ॥२५॥

त्वमर्कस्त्वं सोमस्त्वमसि पवनस्त्वं हुतवहः
त्वमापस्त्वं व्योम त्वमु धरणिरात्मा त्वमिति च।
परिच्छिन्नामेवं त्वयि परिणता बिभ्रति गिरं
न विद्मस्तत्तत्त्वं वयमिह तु यत् त्वं न भवसि ॥२६॥

त्रयीं तिस्रो वृत्तीस्त्रिभुवनमथो त्रीनपि सुरान्
अकाराद्यैर्वर्णैस्त्रिभिरभिदधत् तीर्णविकृति।
तुरीयं ते धाम ध्वनिभिरवरुन्धानमणुभिः
समस्तं व्यस्तं त्वां शरणद गृणात्योमिति पदम् ॥२७॥

भवः शर्वो रुद्रः पशुपतिरथोग्रः सहमहान्
तथा भीमेशानाविति यदभिधानाष्टकमिदम्।
अमुष्मिन् प्रत्येकं प्रविचरति देव श्रुतिरपि
प्रियायास्मैधाम्ने प्रणिहित-नमस्योऽस्मि भवते ॥२८॥

नमो नेदिष्ठाय प्रियदव दविष्ठाय च नमः
नमः क्षोदिष्ठाय स्मरहर महिष्ठाय च नमः।
नमो वर्षिष्ठाय त्रिनयन यविष्ठाय च नमः
नमः सर्वस्मै ते तदिदमतिसर्वाय च नमः ॥२९॥

बहुल-रजसे विश्वोत्पत्तौ भवाय नमो नमः
प्रबल-तमसे तत् संहारे हराय नमो नमः।
जन-सुखकृते सत्त्वोद्रिक्तौ मृडाय नमो नमः
प्रमहसि पदे निस्त्रैगुण्ये शिवाय नमो नमः ॥३०॥

कृश-परिणति-चेतः क्लेशवश्यं क्व चेदं
क्व च तव गुण-सीमोल्लङ्घिनी शश्वदृद्धिः।
इति चकितममन्दीकृत्य मां भक्तिराधाद्
वरद चरणयोस्ते वाक्य-पुष्पोपहारम् ॥३१॥

असित-गिरि-समं स्यात् कज्जलं सिन्धु-पात्रे
सुर-तरुवर-शाखा लेखनी पत्रमुर्वी।
लिखति यदि गृहीत्वा शारदा सर्वकालं तदपि
तव गुणानामीश पारं न याति ॥३२॥

असुर-सुर-मुनीन्द्रैरर्चितस्येन्दु-मौलेः
ग्रथित-गुणमहिम्नो निर्गुणस्येश्वरस्य।
सकल-गण-वरिष्ठः पुष्पदन्ताभिधानः
रुचिरमलघुवृत्तैः स्तोत्रमेतच्चकार ॥३३॥

अहरहरनवद्यं धूर्जटेः स्तोत्रमेतत् पठति
परमभक्त्या शुद्ध-चित्तः पुमान् यः।
स भवति शिवलोके रुद्रतुल्यस्तथाऽत्र
प्रचुरतर-धनायुः पुत्रवान् कीर्तिमांश्च ॥३४॥

महेशान्नापरो देवो  महिम्नो नापरा स्तुतिः।
अघोरान्नापरो मन्त्रो नास्ति  तत्त्वं गुरोः परम् ॥३५॥

दीक्षा दानं तपस्तीर्थं   योगं यागादिकाः क्रियाः।
महिम्नस्तव पाठस्य कलां   नार्हन्ति षोडशीम् ॥३६॥

कुसुमदशनराजः-गन्धर्व-नामा सर्व-
शशिधरवरमौलेर्देवदेवस्य दासः।-
स खलु निजमहिम्नो भ्रष्ट एवास्य रोषात्-
स्तवनमिदमकार्षीद् दिव्यदिव्यं महिम्नः- ॥३७॥

सुरगुरुमभिपूज्य स्वर्ग-मोक्षैक-हेतुं
पठति यदि मनुष्यः प्राञ्जलिर्नान्य-चेताः।
व्रजति शिव-समीपं किन्नरैः स्तूयमानः
स्तवनमिदममोघं पुष्पदन्तप्रणीतम् ॥३८॥

आसमाप्तमिदं स्तोत्रं पुण्यं गन्धर्व-भाषितम्।
अनौपम्यं मनोहारि सर्वमीश्वरवर्णनम्॥ ३९॥

इत्येषा वाङ्मयी  पूजा श्रीमच्छङ्कर-पादयोः।
अर्पिता तेन देवेशः प्रीयतां मे सदाशिवः ॥४०॥

तव तत्त्वं न जानामि कीदृशोऽसि महेश्वर।
यादृशोऽसि महादेव   तादृशाय नमो नमः ॥४१॥

एककालं द्विकालं वा   त्रिकालं यः पठेन्नरः।
सर्वपाप-विनिर्मुक्तः   शिव लोके महीयते ॥४२॥

श्री पुष्पदन्त-मुख-पङ्कज-निर्गतेन
स्तोत्रेण किल्बिष-हरेण हर-प्रियेण।
कण्ठस्थितेन पठितेन समाहितेन
सुप्रीणितो भवति भूतपतिर्महेशः ॥४३॥

॥ इति श्री पुष्पदन्त विरचितं शिवमहिम्नः स्तोत्रं समाप्तम् ॥
॥ इति श्री पुष्पदन्त विरचितं शिवमहिम्नः स्तोत्रं समाप्तम्॥



